தச்சநல்லூர்க் கவிஞர்

வ. அழகிய சொக்கநாத பிள்ளை அவர்கள் இயற்றிய

சங்கரன்கோவில்

# சங்கரர், கோமதி பதிகப் பாமாலை

## விநாயகர் வணக்கம்

சீரார் இராசைத் திருநகர் மேவிய சிற்பரற்கும்
தாரார் குழலுடைத் தையல்நம் கோமதித் தாய்க்கும் இனி(து)
ஏரார் பதிகம் இசைத்திடவே தமிழ் ஈய்ந்தருளிக்
காரார் நிறத்த கடகரி பாதங்கள் காப்பதுவே.

விநாயகர் வணக்கம் :- இராசைத் திருநகர் - சீராசபுரம், சங்கரநாராயணர் கோவில். சிற்பரன் - அறிவுக்கு மேற்பட்டவன். தாரார் குழல் - மாலை பொருந்திய கூந்தல், ஏரார் - அழகு நிறைந்த, கடகரி - மதயானை, விநாயகர்

## சங்கரேசர் பதிகம்

கங்கையஞ் சடைஒரு புறம்படர, ஒருபுறம்
கனக மணிமகுடம் மின்னக்,
கவின்வளைக் குழைஒரு புறந்திகழ, ஒருபுறம்
மகரகுண்டலந் துலங்கச்,
செங்கனற் படைஒரு புறங்கனிய, ஒருபுறம்
திகிரியம் படை இலங்கத்,
தேனிதழி ஒருபுறம் கமழ, ஒரு புறம்வண்
செழுந்துழாய்ப் படலை செறியப்
பொங்குபுலி யதளாடை ஒருபுறங் கொள, ஒரு
புறம் பொலந்துகில் பொருந்தப்,
பூண்டுகொண்(டு) ஒருபாதி மாலுருந் தாங்கிநீ
பூவை கோமதி அம்மையும்
சங்கனும் பத்மனும் காணஅருள் தரிசனம்
தமியனேற்(கு) அருளல் வேண்டும்
தங்கு பரமானந்தம் அன்பர்பெற வேதந்த
சங்கர மகாலிங்க மே! 1

(க) கவின் - அழகு, வளைக்குழை - சங்கினாலாய காதணி, ஒருபுறம் மகர குண்டலம் என்று பிரிக்க. மகரம் - சுறாமீன், தேன்இதழி - தேன் பொழியும் கொன்றை, துழாய்ப்படலை - துளசி இலைமாலை, புலியதள் - புலித்தோல், பொலந்துகில் - பீதாம்பரம், சங்கன், பத்மன் - நாகராசரிருவர், சங்கன் சிவபெருமானை அரனுருவில் கொண்டு வழிபட்டவன்; பதமன்

சம்புபக்க அரி உருவில் வழிபட்டவன்; இருவரும் கருத்து மாறுபாடு கொண்டு, அத்திரி முனிவர் சொல்லால் தேவகுருவைக் கண்டு, அருளுரு இரண்டினும் கடவுள் ஒருவரே யென்னும் உண்மையை உணர்கின்றனர்; புன்னை வனத்தில் தவமியற்றி ஒருமைத் திருக்கோலத்தைக் காணும்பேறு பெறுகின் றனர். இவர்களால் தோற்றுவிக்கப்பட்டதே நாகசுனை விரிவினைத் தல புராணத்துட் காண்க.

மலையமால் வரையுக்ர மாறன்முன் புன்னைவன
வழியாக வருபோது தன்
மதகரி படுத்திடக் கண்டு அதிசயித்துழல,
மாமணிக் கிரீவன் எனுமோர்
புலையனெதிர் வந்திவ் வனத்தைத் திருத்திநான்
புற்றொன்றை வெட்டி எறியும்
போதிலொரு கூளைவால் அரவு சீறிட அதன்
புடைலிங்கம் ஒனறுகண்டே
நிலை மயங்கினன்'என்னலோடும் அசரீரியும்
நிகழ்ந்திட மகிழ்ந்து, நிருபன்
நீணகரி சூழ்தரச் சேணகரி வரைமுட்டி
நீடு கோபுர மதிலுடன்
தலைமைபெற நிருமித்த கோயில்குடி கொண்டுலகு
தனையாளும் இறைவ, எனையாள்!
தங்கு பரமானந்தம் அன்பர்பெற வேதந்த
சங்கர மகாலிங்க மே! 2

(உ) மலையம் - பொதியில், உக்ரமாறன் - உக்கிரபாண்டியன், இவன் மணலூரை (சிகதாபுரத்தை)த் தலைநகராய்க் கொண்டு சிலவிடங்களை ஆண்டவன் என்றும், மதுரைச் சொக்கரை வழிபடும் பொருட்டுப் புன்னை வன வழியே சென்றவன் என்றும் தலபுராணங்கூறும். மணிக்கிரீவன் - சிவகண நாயகன்; தேவியின் சாபத்தால் புலையனாய் உருமாறியவன். புற்று - சங்கபத்மர் இறைவனைத் தொழுது வாழுமிடம், கூளை - கூழை; குட்டை. புடை - பக்கத்தில், அசரீரி - வானொலி, நிருபன் - அரசன்; உக்கிரபாண்டியன், நீள்நகரி - நெடுநகரம், சூழ்தர - சுற்றும்படியாய். சேண் நகரி, அமராவதி, நிருமித்த - ஏற்படுத்திய, விரிவினைத் தலபுராணத்துட் காண்க.

அற்பகலும் மானார் மயக்கத்திலே விழுந்(து)
அறிவெலாம் பறிகொடுத்தே
அலைகின்ற பரம சண்டாளன்என் போலுமிவ்
அகிலத்தில் ஆரும் உண்டோ?

பற்பல விதத்தினுமென் அப்ப,வெனை உனது
கோபத்தினுக் காளாக்கவோ ?
படுதுயர் களைந்தே தடுத்தாண்(டு) எனக்குஅருள்
பாலிப்ப(து) உன்பரங் காண் !
செற்பொலியும் வேய்வனத்திற்கு மேற்பால் நறும்
செண்பக வனத்தில் வடபால்
செறியும் களாவனத்திற்கு நேர் தென்பால்
செழும் புன்னைவனம் அதனிலே
சற்பநிழல் புரியஒரு புற்றடி முளைத்த
சிவசச்சிதானந்த முதலே!
தங்கு பரமானந்தம் அன்பர்பெற வேதந்த
சங்கர மகாலிங்க மே! 3

ந :- அற்பகலும் - இரவும் பகலும், பரம் - சார்பு, செல் - மேகம், சற்பம் - சர்ப்பம்; நாகம்

குவலயந் தனிலெனக்(கு) அரியநர சென்மம்
கொடுத்தாய்; அதற்குள் நீசம்
கூன்குருடு பேடுசெவி(டு) ஊமைமுடம் என்றுரைசெய்
குறைவிலா உருவளித்தாய்,
இவளவினும் உசிதமாய் நன்மையிது தீமையிது
என்றறிய மதியை ஈய்ந்தாய்;
எளிதில் நமை அடையட்டும் என்று புவிதனில்வந்(து)
எழிற் புன்னைவனம் உறைந்தாய்;
பவமொழிந்(து) உய்யவே நாகசுனை தனை
உற்பவஞ்செய்து படிய வைத்தாய்;
பல்பிணிக்குப் புற்றுமண் மருந்(து) ஆக்கினை
பணித்தநின் பான்மை நோக்கித்
தவமுயன்(று) உனையடையாத என் குறையைத்
தவிர்த்தாண்டு கொள்ளல் வேண்டும்,
தங்கு பரமானந்தம் அன்பர்பெற வேதந்த
சங்கர மகாலிங்க மே! 4

(ந) கு - பூமி, வலயம் - வட்டம், இவளவு - இவ்வளவு, உசிதம் - மேன்மை, பவமொழிந்து - பிறவிப்பிணி நீங்கி, உற்பவஞ்செய்து - தோற்றுவித்து, படிய - மூழ்க, உனையடைதற்குத் தவத்தை முயலாத என்க.

கருப்பையினுள் முட்டையைக் கல்லினுள் தேரையைக்
கங்குல் பகல்காக்கும் அந்தக்
கடவுளே நம்மையும் காக்குமெனும் உறுதியே
கருதி ஈடேறும் வண்ணம்,
விருப்பமொடு பாரமும் பழியுமுன் மேல்வைத்து
விட்டலுப்(பு) அற்றி ராமல்,
வீணில் எல்லாமெம் சமர்த்தினால் முடியுதெனவே
உளோர் எண்ணம் வீழ்ந்துன்
திருப்பதம் பணியும் கருத்திலேன் பாழ்ங்கவலை
தீர்வதினி எந்த விதமோ?
தெரிகிலேன்; அறிவுமோர் சிறிதிலேன் தனை
யிரட்சித்து அருளல் கடமை யலவோ?
சருப்பநாண் பூட்டிப் பருப்பதம் வளைத்தவா,
தஞ்சம்நீ! அஞ்சல் என்றாள்!
தங்கு பரமானந்தம் அன்பர்பெற வேதந்த
சங்கர மகாலிங்க மே! 5

(ரு) கங்குல் பகல் - இரவும் பகலும், 'உள் ஓர் எண்ணம் வீழ்ந்து' என்க. வாசுகி எனும் சருப்பத்தை (பாம்பினை) நாணாய்ப் பூட்டி, மேரு மலையெனும் பர்வதத்தை வில்லாய் வளைத்த சங்கரேசா என்றவாறு, தஞ்சம் - அடைக்கலம் என்றாள் - என்று எனை ஆட்கொள்.

பாரதனில் உபகார தேகம் படைத்திலேன்;
பாழ்ங்கவலை என்னும் வெம்மைப்
படு நெருப்பாற்றிலே அறிவை யெல்லாம் மயிர்ப்
பாலமாய் இட்டு ழன்றேன்;
ஓரறிவு நல்கியெனை ஆள்வதுன் பாரமென்(று)
ஓலிடுமென் நிலைமை கண்டும்
உனதுசரண் அருள்வையே, அலதெமன் வசத்திலே
ஒப்புவிப்பாய் கொலோவென்(று)
ஈரடியில் எனை மதிமயங்க வைத்தாய், இனி
இரங்கா(து) இருப்ப தெல்லாம்
ஏழைசொல் அம்பலம் ஏறா(து) எனுஞ் சொல்லை
என்மட்டில் நிச மாக்கவோ?
தாரகம் இலேனென்(று) அறிந்தும் என் மீதில்
இத்தனை பராமுக மாகுமோ?
தங்கு பரமானந்தம் அன்பர்பெற வேதந்த
சங்கர மகாலிங்க மே! 6

(சு) கவலையை நெருப்பாறு எனவும், அறிவை மயிர்ப்பாலம் எனவும் கூறினார். ஓரறிவு - ஈசனை உணரும் அறிவு (அவனருளாலே அவன்றாள் வணங்கி "முதலாய அருள் மொழிகளை யெண்ணிப் பார்க்க). ஓலிடும் - ஓலமிடும். 'அல்லது எமன் வசத்திலே' என்றுபிரிக்க. எனுஞ் சொல் - என்னும் பழஞ்சொல். தாரகம் - பற்றுக்கோடு, பராமுகம் - புறக்கணிப்பு.

இந்தவுடல் நீர்நின்(று) எழுங்குமிழி யாம்என்ப(து)
என்றும் உணரேன், உன்றன் மேல்
இன்பகவி நாளும் புகன்று பிழையேன்; முன்
புரிந்த வினையோவென் செய்கேன்;
அந்தகனும் மேல்வந்து தண்டனை செய்வானென்றுள்
அஞ்சு தலிலேன் வஞ்சனேன்!
அம்புயனும் மாலுந் தொழுங் கடவுளே செம்பொன்
அம்பல முள்ளா(டு) எந்தையே!
பந்தவினை தீர்கின்ற(து) எந்தவிதமோ? தொண்டர்
பண்பை யருள்சீர் உண்டுமோ?
பஞ்சுபடும் பாடும் சமஞ்சொல வொணா(து), உன்
செபஞ் செய்துயும் நாளெந்த நாள்?
சந்ததமும் நீதஞ்சம்; அஞ்சலெனவே நின்
பதம்பரவு பேரன்பு தா!
தங்கு பரமானந்தம் அன்பர்பெற வேதந்த
சங்கர மகாலிங்க மே! 7

(எ) 'நீரிற்குமிழி யாக்கை' என்றார் பிறரும். இன்பகவி - வடசொற் புணர்ப்பாதலின் ஒற்று மிகுந்திலது, அந்தகன் இயமன். அம்புயன் உந்திக் கமலத்து முளைத்தெழுந்த பிரமன். செம்பொன்னாலாய அம்பலத்தில் நடனமாடுகின்ற எந்தையே என்றவாறு. செம்பொன் அம்பலம் - சிற்சபை, வினைப்பந்தம் என்று மாற்றிக் கூட்டுக. 'உன்னைச் செபஞ்செய்து உய்யும் நாள்' என்க. சந்ததமும் - எக்காலத்தும்.

பெருமிதம் எனுஞ் சுத்த சலமில் சமுசாரப்
பெருங்கடலில் ஆழ்ந்து நெஞ்சம்
பிறழ்ந்து, பல கவலையாம் சலசெந்து வாலே
பிடுங்கவும் பட்டு நொந்தேன்;
நிருவகித்திட வெனால் முடியாது; வறுமையிதில்
நிலைகொளாக் கயமாத லால்

நின்பதம் ஆகின்ற புணையினது துணையலால்
நீந்திடுவ தரிது; மேலும்
குருவியின் தலையிற் பனம்பழத்தினை வைத்தல்
கூடுமோ? வாடும் அடியேன்
குறைபாட்டை நின்னுடன் கூறாமல் ஆருடன்
கூறி முறையிடுவது உரையாய்!
சருவ பரிபூரண அகண்ட சிற்சொரூபமே!
தற்காக்க இது சமயமே!
தங்கு பரமானந்தம் அன்பர்பெற வேதந்த
சங்கர மகாலிங்க மே! 8

(அ) சுத்த சலம் - தூய நீர், சலசெந்து - நீர்வாழ் உயிர், கயம் - சுழி "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவனடி சேராதார்" என்பது தமிழ்மறை, "குருவியின் தலையில் பனம்பழம் வைத்தல்' என்றது பழமொழி ஆருடன் - யாருடன், அகண்ட - எல்லையற்ற, சிற்சொரூபம் - அறிவு வடிவம்.

முன்புரகர் போற்றவும் பாதியுடல் மாலுருவம்
முற்றிவந்(து) அருள விலையோ?
முனிவிண்டு சருமனருள் கைனி தக்கணை
தவமுயன்றிட இரங்க விலையோ?
தென்புலத்தார்க் கென்ற கனி தின்றஒரு
வீரசேனன் வினை, தீர்க்க விலையோ?
சீதை முலை கொத்தும் வாயசமாம் சயந்தன் வினை
தீர்த்த அவ்வுரு மாற்ற விலையோ?
பொன்புதையல் பெற்றுமதை வம்பினால் போக்கி
யுழல் புலையனைக் காக்க விலையோ?
புயங்கத்தனைக் கொன்ற கன்மாடபாதன் வினை
போக்கி அருள்புரிய விலையோ?
தன்புத்தி யில்லாமல் அலையுமெனை மாத்திரம்
தான் திருத்துவது மலையோ?
தங்கு பரமானந்தம் அன்பர்பெற வேதந்த
சங்கர மகாலிங்க மே! 9

(சு) உரகர் - நாகர், சங்கபத்மர், முனி - முனிவன், விண்டுசருமன் - விஷ்ணுசர்மா. கைனி - கைம்பெண். தக்கணை - பெயர். விண்டு சருமன் மகள் தக்கணை பண்டை வினைப்பயனால் மணம் நிகழ்ந்த ஒரு திங்களில் கைம்பெண்ணாயினாள். பின்னேழு பிறவியுள்ளும் கைம்மைத் துன்புற்று இறுதியில் இறைவனருள் பெற்றாள். இவள் வரலாறும் தலபுராணத்தால்

அறியப்படும். தென்புலத்தூர் - பிதுரர், வீரசேனன் - ஒரு மன்னன், நள்ளிருளில் ஓரில்லத்துத் திண்ணையில் ஒதுங்கிய மன்னன் பசியால் வாடு கிறான், வீட்டு வேலைக்காரர்கள் அவனை மன்னனென்று கண்டு உள்ளிருந்து உணவுப் பொருள் கொணர்ந்து கொடுக்கின்றனர், இல்லத் துக்குரிய அந்தணன் மறுநாள் பிதுர்க்கடன் ஆற்றும் பொருட்டாய்ச் சேர்த்துவைத்த உணவுப் பொருளாதலின் அதனை உண்ட மன்னருக்கு மயக்கநோய் காண்கிறது. பல்லாற்றானும் தீராத அந்நோய் வாயசம் - காக்கை. சயந்தன் சங்கர மகாலிங்கர் அருளால் குறைநீங்கப் பெற்றான் என்பது தலபுராணம். புலையன் - விருகன் என்று வடமொழிப் புராணமும் கானவன் என்று தமிழ்ப் புராணமும் கூறும் புன்னை வனநாதர் அருளால் தீர்கிறது. இதுவும் தலபுராணத்தில் கண்டது. எலி பிடித்தும் விறகு விற்றும் பிழைப்பு நடத்திய விருகன் ஒருகால் வளைதோண்டுகையில் புதையல் பெற்றான், குலப்பெண்ணை மணந்தும் பரத்தையர்க்கும் வம்புக்கும் பொருளைச் செலவிட்டு வறியனாயினான், விறகு விற்றற் பொருட்டுப் புன்னை வனமடைந்தவன் விறகு விலையாகாமல் பசியால் நாகசுனைக் கரையில் மயங்கி விழுந்தான். சுனை நீரைத் தெளிக்கப்பெற்றதும் முத்தி யடைந்தான். இதுவும் தலபுராணத்துட் கண்ட வரலாறு. புயங்கம் - ஈண்டுப் பசு கன்மாடபாதன் - கல்மாஷன் என்னும் அந்தணன். தந்தை ஏவலால் தருப்பை கொண்டு வரும் வழியில் கன்மாடன் ஒரு பசுவைச் சேற்றில் தள்ளுகிறான். அப்பசு மாய்கிறது, பசுக்கொலை புரிந்த பாவத்தைக் கழுவ, ஹாரீத முனிவர் சொற்படிப், புன்னைவனத்தில் மூன்று நாள் தங்கி, நாக சுனை படிந்து சங்கர மகாலிங்கரை வழிபட்டு உய்கிறான். இது தல புராணத்துள் வரும் வரலாறு.

இளமையினில் விடயாதிகளில் மனஞ்சென்று உப்பு
இருந்த பாண்டத்தின் உடலாய்,
எயிறுபோய், நரைதிரை யொடுங்,குக்கு என்றிருமி
இருமி ஆயாசம் எய்ப்புக்
கொள, மனைவியும் அமிதென கிழமெனப் பேசவே,
கோலூன்றி நடமாட்டமுங்
கூட முட்டிக், கிடையிலே கழிந்து, ஆவி குறு
குறெனவும் ஒடுங்கினவுடன்
வளமையினில் ஊர்மெய்க்க ஒப்பாறு சொல்லியே
மனைவியழ மக்கள் பந்து வர்க்கமழவே
எடுத்துக் கொண்டுசுடு காட்டில்
வைத்து எருவின்மேற் கிடத்தித்
தளதளென அழல்மூட்டி விடுமுன்னம் நின்பதத்
தண்ணிழல் எனக்கருளு வாய்
தங்கு பரமானந்தம் அன்பர்பெற வேதந்த
சங்கர மகாலிங்க மே! 10

(க0) விடயாதிகளில் - விடயம் ஆதிகளில் - பொருளின் பங்களில், உப்பு உடலாய் - உப்பு நெடுநாள் வைக்கப்பெற்ற கலத்தைப் போல உடல் உருக்குலைந்து, எயிறு - பல், குக்கு - என்றது ஒலிக்குறிப்பு, அமிது - உணவு அளவற்ற கிடை - படுக்கை, ஒப்பாறு - ஒப்பாரி - போலியழுகைப் பாட்டு, வர்க்கம் - கூட்டம், 'சுடுகாட்டில் வைத்து எருவின்மேல்' எனப்பிரிக்க.

**சேணுரசு மணிமாட கூடகோபுரமுடன்**
**திகழ் ராசைநகர, சரணம்!**
**தேவியுமை கோமதி மணாள, சரணம்! பிறைச்**
**செஞ்சடைச் செல்வ, சரணம்!**
**பூணுமர வாபரண, சரணம்! சரணம்**
**புன்னைவன நாத சரணம்!**
புற்றடி முளைத்த சிவசம்புவே, சரணம்!
புராந்தகா, புனித சரணம்!
**வாணுதற் கண்ணுடைய வள்ளலே, சரணம்!**
அவ்வனம் வெட்டி யாமோர் புலைய
மணிக்கிரீவனாற் கண்ட வா, சரணம்! அமரருளம்
**மகிழ்மணிக் கிரீவ, சரணம்!**
**தாணுவே, சரணம்! ஒரு பாதியுடல் மாலுருத்**
**தாங்கிவரு சகுண, சரணம்!**
சச்சிதானந்த சிவ சங்கர மகாலிங்க,
சரணம், நினதிரு சரணமே! 11

(கக) சேண் - வானம், 'பூணும் அரவு (பாம்பு) ஆபரண' எனவும் புராந்தகன் - திரிபுரத்துக்குக் காலன். வாணுதற்கண் - ஒளி பொருந்திய நெற்றிக்கண். 'மணிக்கிரீவன்' இரண்டனுள் முந்தியது பெயர்; பிந்தியது நீலகண்டன் என்னும் பொருட்டு கிரீவம் - கழுத்து, ஆலம் உண்டு தம்மை யளித்தமையால் அமரர் உளம் மகிழ்ந்தனர்.

---

# கோமதியம்மைப் பதிகம்

சீர்பூத்த திருமேனி அழகும் மெய்யடியார்
சிரம்பூத்த கழலின் அழகும்,
செகம்பூத்த மணிவயிற் றழகும்,வண் கொடையனு
தினம்பூத்த செங்கை அழகும்,
நார்பூத்து அருட்பால் சுரக்குமுலை யழகும், பொன்
நாண்பூத்த மிடற்றின் அழகும்,
நகைபூத்த செவ்விதழ்க் குமுதவாய் அழகும், எள்
நனைபூத்த நாசி அழகும்
கூர்பூத்த வேல்நெடுங் கண்ணழகும், மின்னுபொற்
குழைபூத்த காதின் அழகும்,
குணம்பூத்த தாமரை முகத்தினழகும்,
குங்குமம் பூத்த நுதலின் அழகும்,
வார்பூத்த குழலழகும், வாழ்த்தவரன் அருளுவாய்
மால் வடிவமொரு பாதியா
மண வாளரைக் கருதி அருள்சேர் தவப் பெண்ணென
வருகோ மதிப்பெண் உமையே! 1

(க) அடியவர் தலைமேற் கொள்ளுதலின் 'மெய்யடியார் சிரம்பூத்த கழல்' என்றார். அனுதினம் - நாள்தோறும் நார் - அன்பு எள்நனை - எள்ளுப்பூ கூர் - கூர்மை, வேல்நெடுங்கண் - வேல் போன்ற நீண்ட கண், வார் - நீட்சி, பாதாதி கேச வருணணை.

உற்றென்னை ஆள்வாய், குழற்சடை விரித்தே
உரித்த மரவுரி தரித்தே
ஒண்கழுத்தினிலும் இரு தோளிலும் காதிலும்
உருத்தி ராக்கம் புனைந்தே
பொற்றிரு வுடம்பெலாம் வெண்ணீ(று) அணிந்தே
புனற்பொருநை நதியின் வடபால்
புன்னையங் காவினிடை அமரர்தரு வாய்நிழல்
புரிந்திட அரம்பையர் எலாம்
சுற்றும் பசுக்களாய் அவதரித்(து) இன்பால்
சுரத்திடப் பல உயிர்களும்
துடித்திடவொர் காலினை மடித்துவைத்(து) உலையில்
வைத்துக்காய்ந்த ஊசி முனையின்

மற்றொர்கால் விரலூன்றி நின்றுமனம் ஊன்றியே
மால் வடிவமொரு பாதியா
மண வாளரைக் கருதி அருள்சேர் தவப் பெண்ணென
வருகோ மதிப்பெண் உமையே! 2

(உ) சங்கரநாராயணர் திருக்கோலத்தைக் காண விரும்பிய தேவி இறைவன் சொற்படி புன்னை வனத்தில் தவமியற்றினாள் என்பது புராண வரலாறு. தேவியுடன் சென்ற தேவர் தருக்களாகவும், தேவ மகளிர் பசுக்களாகவும் நின்று தொண்டாற்றினர் என்ப.

ஊர்ச்சித மதானஉயர் வள்ளுவர் திருக்குறளி
னுள்அவா என்ப எல்லா
உயிர்க்கு மெஞ்ஞான்றும் தவாப் பிறப்பீனும் வித்(து)
உறுதியிது எனல் உணர்ந்தும்
எச்சினுக் கிடமாக மெத்த மெத்தப்படித்(து)
என்னதான் பிரயோசனம்?
ஏட்டுச் சுரைக்காய் கறிக்குதவ மாட்டா(து)
எனும் பழமொழிப் படிக்கே
ஆச்சு தல்லால்ஆசை ஒழிகிலேன், சிறிதுநின்
அருள்நோக்(கு) என்மீதில் உண்டாம்
ஆயினப் பாலடிமை உய்வதற் கையமோ?
அவ்வளவு செய்தென் மன
மாச்சரியம் நீக்காத ஆச்சரியம் என்சொல்கேன்!
மால் வடிவமொரு பாதியா
மண வாளரைக் கருதி அருள்சேர் தவப் பெண்ணென
வருகோ மதிப்பெண் உமையே! 3

(ங) ஊர்ச்சிதமான - நிலைபேறுடைய. "அவா என்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும் தவா அப் பிறப்பீனும் வித்து" (திருக்குறள் 361) எஞ்ஞான்றும் - எப்போதும். தவா - ஒழியாத, "அருள்நோக்கு உண்டாகுமாயின்) அப்பால் அடிமை உய்வதற்கு ஐயமோ" எனப் பிரிக்க, மனமாச்சரியம் - உள்ள மாறுபாடு, பொறாமை ஆச்சரியம் - வியப்பு

ஏதாகிலும் தவமியற்றி அறியே னதனை
எண்ணிநீ இகழ் வதானால்
என்னாலும் முடியுமோ? நின்அன்பர் கூட்டத்துள்
எனையொரு தொழும்பன் ஆக்கிப்

பாதார விந்தத்தின் நீழலில் இருத்தி
உட்பட்சம் வைத்தாட் கொளாமல்
பாறை போலும் கூடிய நெஞ்சராம் வஞ்சகப்
பரம லோபரை எநாளும்
தாதா எனச்சொலி இரக்க விட்டால் உன்
தனக்கே இழப்பம் இலையோ?
தயையுடன் பிள்ளைகள் மனச்சடைவை ஆற்றுவோர்
தாயலா(து) ஒருவர் உண்டோ?
மாதாவும் நீயாய் இருந்தும் இவ்வயிரமேன்?
மால் வடிவமொரு பாதியா
மண வாளரைக்கருதி அருள்சேர் தவப் பெண்ணென
வருகோ மதிப்பெண் உமையே! 4

(ச) தொழுப்பன் - அடியவன், பாதாரவிந்தம் - திருவடித்தாமரை நீழல்- நிழல், உட்பட்சம் - உள்ளன்பு, 'வைத்து ஆட்கொள்ளாமல்' எனப்பிரிக்க. பரமலோபர் - கடைந்தெடுத்த கஞ்சர். எநாளும் என்றது விகாரம் தாதா - தந்தை; பெருங்கொடையாளன், 'தா! தா" என்றலும் ஒன்று, இழப்பம் - இழிவு, வயிரம் - செற்றம், தாதா - தாதையின் விளி.

சிறுமையொடு தொலையா விசாரமுற்(று) எவளவும்
சிந்தையில் தைரியம் அற்றுத்,
தேகம் வேற்றுருவமாய்ப், புத்தியும் மழுங்கியே,
தேனீயை அனையர் இல்லத்
தொறுமலைந்(து) ஒருபயனும் அடையாது, வெம்பசித்
துயரால் வருந்தி, அந்தோ!
துதிக்குமனையாட்டி வாய்பேசு வதெலாம்
பொறுத்துக் கொண்டிருந்தது, நெஞ்சம்
குறுகுறுத் திட, என்னை யாவரும் மதிப்புக்
குறைச்சலாய் எண்ண வைத்துக்
கொடிய வெம்பிணியினும் கடியதாய் வாட்டியே
கொல்லாது கொல்ல வந்த
வறுமையை இனித்தாங்க முடியாதென் அம்மணீ!
மால் வடிவமொரு பாதியா
மண வாளரைக் கருதி அருள்சேர் தவப் பெண்ணென
வருகோ மதிப்பெண் உமையே! 5

(ரு) விசாரம் - கவலை, எவளவும் என்று தொகுத்தல் விகாரம், தேனீயை அனையர் - தேனீயைப் போலும் வரைவின் மகளிர் இல்லந் தோறும் அலைந்து - வீடுதோறும் திரிந்து இல்லந்தோறும் மலைந்து எனப் பிரித்தால் வீடுதோறும் புக்கு வருந்தினனப் பொருளுரைக்க "இன்மையின் இன்மையே இன்னாதது" எனவும் "இளிவந்த சொற் பிறக்கும் சோர்வு தரும்" எனவும் "ஈன்ற தாயானும் பிறன்போல நோக்கப்படும்" எனவும் "நெருநலும் கொன்றது போலும் நிரப்பு" எனவும் வரும் தமிழ்மறை மொழி களை ஓர்க.

சலசநிகர் விழியிலே, கலசநிகர் முலையிலே,
சந்த்ர முகவிம்ப மதிலே,
சடையிலே, இடையிலே, நடையிலே உடையிலே,
தனுசை நிகர்புரு வத்திலே,
திலகமிடு நுதலிலே, இலவனைய இதழிலே,
செங்காந்தள் அங்கையிலே,
திட்டிகொள் பகத்திலே, மெட்டிகொள் பதத்திலே
சிந்தையைச் சிதற விட்டே,
உலகின்மிசை மானார் மயக்கம் பிடித்தலைந்(து)
உழலாமல், மெய்யறிவிலே,
உன்னடியர் தொண்டிலே, பன்னரிய சிவஞான
யோக மார்க்கத்திலே, நின்
மலரடியிலே, மனம் பற்றவரம் அருள்வையோ?
மால் வடிவமொரு பாதியா
மண வாளரைக் கருதி யருள்சேர் தவப் பெண்ணென
வருகோ மதிப்பெண் உமையே! 6

(சு) சலசம் - தாமரை, கலசம் - கும்பம், குடம் சந்த்ரமுகவிம்பம் - மதி போலும் முகத்தொளி விம்பம் - உருவமும் ஆகும். தனுசு - வில், இலவு - இலவம் பழம், திட்டி - திட்டி விடப்பாம்பின் படம், பகம் - குறி, மெட்டி - காலணி வகை பதம் - பாதம் ; கால், பன்னரிய - சொல்லுதற்கரிய, மானார் - பெண்கள்.

மெய்கண்ட தெல்லாம் எனக்குவேப் பங்காய்;
விவேகமோ சுத்த சூன்யம்
வீணிடம் பத்திலோ வெகுபிரமை, சூதே
விருத்தி; ஆங்காரம் மிகுதி

பொய்கண்ட பாடம்; நான் பொன்னாசை யிற்புலி;
பொறாமை நிறையும் குடுக்கை;
புறணி பேசுவதிலோ அதிக அப்பியாசி;
எப்பொழுதிலும் மனக் கவலையே
கைகண்ட பலனா அடைந்திருக்கிறது; கொலை
களவினிற் சூறாவளி;
காமமென் உடலினோ(டு) ஒட்டின பசாசிவை
களைந்தென்னை ஆட்கொள் வையோ?
மைகண்ட கண்ணியே, நின்கருத் தறிகிலேன்!
மால் வடிவமொரு பாதியா
மண வாளரைக் கருதி அருள்சேர்தவப் பெண்ணென
வருகோ மதிப்பெண் உமையே! 7

(எ) வீண் இடம்பம் - வெற்று ஆரவாரம். பிரமை - பிரேமை; விருப்பம் ஆங்காரம் - இறுமாப்பு, குடுக்கை - குடுவை; ஒரு கலம். புறணி - புறங் கூறுதல், அப்பியாசி - பயிற்சி பெற்றவன் பசாசு - பிசாசு; பேய், மைகண்ட - மையுண்ட.

கொஞ்சமல நான்செய்த பாவமிது தீரநின்
கோயிலுள் விளங்கு கின்ற
குவளையந் துணர் பூத்தநாகசுனை மூழ்கி யென்
குறையிரந்(து) அன்பு கொண்டுன்
செஞ்சரண விகசிதாம் புயமலர்த் துணையையொரு
சிறிது நான்வாழ்த்தி யறியேன்;
தேர்கிலென் போலும் படித்த முட்டாள் இச்
செகத்தில் இலை யாதலாலே
நெஞ்சம(து) இரங்கிநீ என்பிழைகள் யாவும்
மன்னிப்பதே மாவிசேடம்;
நிக்ரகித் திடமனதில் உள்ளதெனில் அம்மஅது
நீசெய்ய வேண்டும்; அல்லால்
வஞ்சநமன் வசமென்னை ஒப்புக்கொடாதே; முன்
மால் வடிவமொரு பாதியா
மண வாளரைக் கருதி அருள்சேர்தவப் பெண்ணென
வருகோ மதிப்பெண் உமையே! 8

(அ) துணர் - கொத்து, செஞ்சரணம் - சேவடி விகசிதாம்புய மலர் - விரிந்த தாமரை மலர், துணை - இணை தேர்கிலேன் போலும் - ஆராயா

தவனாகிய என்னைப் போலும் 'தேர்கில்' (ஆராயுங்கால்) என்னைப் போலும்' எனப் பிரித்தலுமாம், யாவும் - யாவற்றையும் மாவிசேடம் - பெருந் தகுதி, நிக்ரகித்திட - அழித்துவிட.

சூரியோதயம் என விளங்கு நின்பேரெழில்
துலங்க மஞ்சன மாட்டியே,
சூழியக் கொண்டையும் முடித்து, மையிட்டணிச்
சுட்டியும் தொங்க விட்டுக்
காரிருள் சிதைக்கும் வெண்முத்து நத்திட், டிலகு
காதோலை இட்டு, வச்ரக்
கண்டசரம் இட்,டார கேயூரம் இட்டுவளை
கடகமிட்(டு), இறைவர் முடியின்
ஆரிலகு காலிற் சிலம்பிட்டு, நின்சேவடி
யானசிறு பெண்களோடே
அன்றுன்னை விளையாட விட்டு, வெற்பாசியுள்
ளடங்கா மகிழ்ச்சி யுடனே
வாரி முத்தமிடும் குழந்தையே, அருள்செய்வாய்!
மால் வடிவமொரு பாதியா
மண வாளரைக் கருதி அருள்சேர்தவப் பெண்ணென
வருகோ மதிப்பெண் உமையே! 9

(டு) மஞ்சனமாட்டி - நீராட்டி, சூழியக்கொண்டை - குழியம் அணிந்த கொண்டை, குழியமென்பது உச்சிக்கொண்டையிலே அணியப்படுவது, அணிச்சுட்டி - அழகிய நெற்றியணி. முத்துநத்து - முத்தாலாய மூக்குக் குத்தி, கண்டசரம் - கழுத்துமாலை, கேயூரம் - தோளணி வகை. வளை கடகம் - உம்மைத் தொகையாய் வளையும் கடகமும் உணர்த்திற்று. வெற்பரசி - மேனை என்பாள், வெற்பு - இமயமலை.

சுரபதியின் வாழ்வையும் திரணமாய் எண்ணிடும்
துணிவெனக்(கு) அருளல் வேண்டும்
சூழுநின் தொண்டருடன் வாழும் படிக்கருள்
சுரந்தி ரட்சிக்க வேண்டும்!
பரமசத் துருவு நின்பேர்சொன்ன பொழுதே!
பயந்தெனைப் பணிய வேண்டும்!
பதகிருபையாலே நினைத்தது கைகூடும்
படிக்கு வரநல்க வேண்டும்

தரணியில் இருக்கும்வரை நோயற்ற வாழ்வொடுஉன்
தாள்தொழுது நீட வேண்டும்!
தாயே! உனைப்பாடும் வாயால் நரதுதி
தனைச்செயா(து) ஆள வேண்டும்!
மரணவாதை களின்றி முத்திசேர்த்திட வேண்டும்!
மால் வடிவமொரு பாதியா
மண வாளரைக் கருதி அருள்சேர்தவப் பெண்ணென
வருகோ மதிப்பெண் உமையே! 10

(ய) சுரபதி சுரர்க்குப் பதியாகிய இந்திரன். திரணம் - திருணம், சிறுமை. 'வாழும்படிக்கு அருள்சுரந்து இரட்சிக்க வேண்டும்' என்று பிரிக்க பரமசத்துருவும் - கொடும் பகைவனும். பதகிருபை - திருவடித்துணை, நரதுதி தனைச்செயாது - மக்களாய்ப் பிறந்தோரை வழுத்திப்பாடாமல், மரணவாதை - இறப்புத்துன்பம்.

புன்னைவனம் வாழ்க!உயர் பூலோக கயிலாய
புகழ் ராசை நகரம் வாழ்க!
புரிசை விண்தொடு கோபுரத்தொடு விளங்குநின்
பொன்னெடுங் கோயில் வாழ்க!
கன்னலஞ் சுவையினீர் மதுரித்து; முழ்குவோர்
கருமந் தொலைத்தி ரத்நம்
கமழ்நாக சுனைசெயும் கம்பலைகள் என்று
நீங்காத நின் சன்னிதி யின்முன்
சென்னிதாழ்த்தித் தினந்தொழும் அன்பர் வாழ்க! நின்
சேவடிக் கமலம் வாழ்க!
தெய்வவெண் திருநீறு வாழ்க! அருள் கூர்ந்தவிச்
செந்தமிழ்ப் பதிகம் வாழ்க!
உன்னரும் பதிகமிதை நன்னய மதாய்ப்படிப்
போர்களுங் கேட்போர்களும்
உலகெலாம் பரவு கோமதியே, நின் அடிமையாய்
ஊழி காலமும் வாழ்கவே! 11

(கக) புரிசை - மதில், இதன்பின் 'ஒடு' என்பது வருவிக்க. கன்னலஞ் சுவையின் நீர் மதுரித்து - நீர் கரும்பின் சுவையினும் இனிதாய். கருமம் - தொலைந்து - வினை தீர்த்து, கம்பலை - ஆரவாரம், நன்னயமதாய் - உள்ளன்போடு.

---

# கோமதியம்மை இன்னிசை மாலை

## விநாயகர் வணக்கம்

ஆர்மிஞ்சு வேணியர்பால் அன்னையுமை கோமதிமேல்
நார்மிஞ்சும் இன்னிசை மாலை நவிலச் – சீர்மிகுஞ்
சுவேதத் தந்தத்தான் துணைக் கழலான் ஒற்றைச்
சுவேதத் தந்தத்தான் துணை.

விநாயகர் வணக்கம் : ஆர் - ஆத்தி, கார் - அன்பு, சீர் மிஞ்சு வேதத்து அந்தத் தான் எனவும் ஒற்றைச் சுவேதத் தந்தத்தான் எனவும் பிரிக்க; முன்னது சிறப்புப் பொருந்திய மறை முடிவாயுள்ளான் எனவும், பின்னது ஒற்றை வெண்ணிறத் தந்தத்தையுடையான் எனவும் பொருள்படும்.

## நூல்

மாமேவும் புன்னை வனமேவு மெய்யடியார்
தாமேவும் பாதந்தனை மேவுந் தன்மை தந்தாள்
பாமேவும் ராசைப் பதிமேவும் புற்றடிவாழ்
கோமேவும் பார்வதியே கோமதித்தாய் ஈச்வரியே. 1

(க) தன்மை தந்தாள் - தன்மையைக் கொடுத்து (என்னை) ஆட்கொள் வாயாக.

முக்திஎவ்வா(று) உற்றடைவேன் ? மூவாசை தன்னில் வைத்த
பத்தியிலே கோடியில்ஓர் பங்கு உன்மேல் வைத்தறியேன் !
எத்திறம்நான் உய்வதம்மே ? என்மேல் கடைக்கணித்தாள் !
கொத்திலகும் பூங்கொடியே ! கோமதித்தாய் ஈச்வரியே. 2

(உ) மூவாசை - மூன்றாசைகள், கடைக்கணித்து + ஆள், கொத்து இலகும் பூங்கொடி - மலர்க்கொத்து இலங்குகின்ற மெல்லிய கொடியே.

சோர்ந்து மெலிந்தேன்; துயர்த்தவிர்த்துஎன்று ஆண்டுகொள்வாய்!
ஓர்ந்து சிவனார் உடலில் ஓர்பாதி மாலுருவம்
சேர்ந்து வருகின்ற திருக்காட்சி காண உள்ளங்
கூர்ந்து தவஞ் செய்தபொன்னே ! கோமதித்தாய் ஈச்வரியே ! 3

(ங) தவிர்த்து + என்று

மேலையுல(கு) ஏகினும், நீ மெய்த்தவசு செய்த புன்னைச்
சோலையையும் நாக சுனையையும் நான் காண்பேனோ ?
வாலை மனோன்மணியே ! மன்னுலகம் எங்கணுஞ்செங்
கோலை நடாத்துங் குயிலே ! கோமதித்தாய் ஈச்வரியே ! 4

(ச) வாலை - கன்னி

விடைபிடித்(து) அங்கேறும் விமலர் உடன்வந்து
கடைபிடித்து நோக்கியருள் காட்சியென்று காண்பேனோ?
சடைபிடித்துக் கோபியரைத் தானிழுத்து வெற்பைக்
குடைபிடித்தோன் தங்கையே! கோமதித்தாய் ஈச்வரியே! 5

(ரு) விமலர் - இயல்பாகவே கட்டுக்களின் நீங்கியவர். வெற்பைக் குடைபிடித்தோன் - திருமால்

கற்றறிந்த மோழை என்போல் கண்டது உண்டோ? காசறநின்
பொற்றுணைத் தாளைச் சிறிதும் போற்றி உய்ந்தேன் இல்லையம்மா
சிற்றறிவால் நாயேன் தெரிந்து தெரியாது செய்த
குற்றமெல்லாம் நீ பொறுப்பாய், கோமதித்தாய் ஈச்வரியே. 6

(சு) மோழை - அறிவிலி, காசு - குற்றம்; உயிர்க்குக் குற்றமாவது பாசக் கட்டு

வீறுகொண்ட கன்ம வியாதி கொண்டோர் மாதாந்தந்
தோறும் வந்து நாக சுனை படிந்துஉன் சேவைசெய்து
தேறுதலைக் கொண்டு தம்நோய் தீர்ந்திருப்ப(து) அவ்வவரே
கூறுவது; என் மட்டிலையே! கோமதித்தாய் ஈச்வரியே! 7

(எ) மாதம் அந்தம் - திங்களிறுதி, தேறுதல் - ஆறுதல், என் மட்டிலையே என் (பிறவி) நோய் தீர்ந்திலதே என்று வருந்தியவாறு

ஒன்றிரண் டென்றோ சொலுவேன்! ஓயாக் கவலை எனத்
தின்று விடும்படிக்குச் சேர்ந்த வறுமைப் பிணியால்
என்றரத்தோர் முன்புசெல்ல எண்சாணும் ஓர்சாணாய்க்
குன்றுதே என்றனுடல்! கோமதித்தாய் ஈச்வரியே! 8

(எ) என் தரத்தோர் - என் நிலையிலுள்ள மக்கள் எண் சாணும் - 'எறும்பும் தன் கையால் எண்சாண்' எனும் பழஞ்சொல்லை நோக்குக.

உண்டாடும் செல்வரைக் கண்(டு) உன்னடிமை யாகிடும்நான்
திண்டா டுவதுன் திருவுளத்துக்(கு) ஏற்ற தென்னோ?
வண்டாடும் புன்னை வனநாதர் மாமயலுட்
கொண்டாடும் பெண்மயிலே! கோமதித்தாய் ஈச்வரியே. 9

(சு) மயல் - மயக்கம், உட்கொண்டு - உள்ளத்தே கொண்டு

பூதலத்திலே நரைப் போற்றி யடையும் பயன்மற்(று)
ஏது? மலை கல்லி எலிபிடிக்கப் போனதன்றோ?
மாதவர்தேர் நின்சரணை வாழ்த்த வரம் தந்தருள்வாய்
கோதுபடா மாமணியே! கோமதித்தாய் ஈச்வரியே. 10

(க0) கல்லி - தோண்டி, 'மலைகல்லி எலி பிடிக்கப் போனது' என்றது பழமொழி, தேர் - நாடுகின்ற, சரண் - திருவடி, கோது - குற்றம், நரர் - மனிதர்.

தமிழினொடு மாலை உன்மேற் சாற்றியுய் யா(து), எல்லா
ருமிழிவெனைச் சொல்ல உலுத்தர்மேல் சாற்றி நொந்தேன்!
சிமிழின்முலை மாதே! இத்தேக மென்ன! நீரிற்
குமிழியன்றோ? அம்மா!என் கோமதித்தாய் ஈச்வரியே 11

(கக) எல்லாரும் + இழிவு + எனை, இழிவு - இகழ்ச்சி, சிமிழின் - 'இன்' உவமஉருபு, உலுத்தர் - உலோபி

வெஞ்சிரிப்புக்(கு) ஆளாக விட்டாய்! எனைச் சிரித்தி
டுஞ்சிரிப்பி னால் இழப்பம் ஒன்றுமெனக்(கு) இல்லையம்மே!
தஞ்சிரிப்பால் கோட்டைசுட்ட சாமிகெஞ்சும் போது, மெள்ளக்
குஞ்சிரிப்புக் கொண்டு நின்ற கோமதித்தாய் ஈச்வரியே 12

(கஉ) எனை + சிரித்திடும் + சிரிப்பினால், இழப்பம் - தாழ்வு, தம் + சிரிப்பால் கோட்டை - திரிபுரம் குஞ்சிரிப்பு - இளநகை

பாபத்துக்கே அடிமைப் பட்டேன் தனையுமிந்த
ஆபத்து வேளையில்வந்(து) ஆட்கொளவே வேண்டுமம்மா!
தீபத்துக்குள் இலங்கும் சின்மயமே! நின்னுடைய
கோபத்துக்(கு) ஆர்முனிற்பார், கோமதித்தாய் ஈச்வரியே 13

(கங) சின்மயம் - அறிவு வடிவம், தீபமாவது அறிவு ஒளி, ஆர் - யாவர், முன் + நிற்பார்

பேணரிய வெண்ணெய்ப் பிரதமையின் மீதில் அக்னி
பாணப் பிரயோகம் பண்ணப் பொறுத்திடுமோ?
சேணுலகம்மே, நின் சினஞ் செலுத்தத் தாங்குவனோ
கோணற் பிறைநுதலாய்! கோமதித்தாய் ஈச்வரியே! 14

(கச) பிரதமை - ஈண்டு உருண்டை எனும் பொருட்டு, அக்னிபாண நெருப்புக் கணை, சேண் + உலகு + அம்மே - விண்ணுக்கும், மண்ணுக்கும் தாயே என்றவாறு.

வழிந்திரக்கம் அற்ற மலடி யன்றோ பிள்ளை
அழுந்தொனியைக் கேட்டுங் கேளாதவள் போலேயிருப்பாள்?
எழுந்தருள்வாய் அம்மா! நீ என்ன இரண்டு
குழந்தை பெறவிலையா? கோமதித்தாய் ஈச்வரியே. 15

(கரு) தொனி - குரல்

தீயின்மெழுகாய் உருகிச் சிந்தைநொந்து வாடுகின்றேன்!
தாயினும் அன்பான தயாபரியே! தஞ்சமம்மா!
மாயிரு ஞாலத்திலுன்னை வாழ்த்தும் அன்பர் உள்ளமெனும்
கோயில் குடிகொண்டவளே! கோமதித்தாய் ஈச்வரியே! 16

(கசு) தீயின் மெழுகாய் - தீயின்கண் பட்ட மெழுகினைப் போல், தயாபரி - அருள்மேம்பட்டவள், "பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து" "தாயிற் சிறந்த தயாவான தத்துவனே" முதலாய அருள்மொழி களை ஓர்க. அன்பர் உள்ளமெனும் கோயில் - "தொழும்பர் உளக் கோயிற்கு" "நினைப்பவர் மனமே கோயிலா" முதலியவற்றோடு ஒப்பு நோக்குக.

மாநகரும் வர்ச மலரெடுத்துஉன் தாள் வணங்கா
ஈனகரம் படைத்திங்(கு) என்ன உபயோகம் அம்மே?
பூநகரெல்லாம் ஒருங்கு பூசைபுரி ராசையெனும்
கோநகர வாழ்வுடையாய்! கோமதித்தாய் ஈச்வரியே. 17

(கஎ) மாநகரும் - வண்டாடும், ஈனகரம் - இழிந்தகை, பூநகர் - உலகத்து நகரங்கள்

உள்ளளவும் நித்தம் உனை நினைத்திடாது உழன்றேன்!
எள்ளளவும் உய்யும்வகை ஏதுஇனிமேல், மேதினிமேல்?
பிள்ளைமதி சூடும் பெருமான் அறிவை யெல்லாம்
கொள்கைகொண்ட வாள்விழியாய்! கோமதித்தாய்
ஈச்வரியே. 18

(கஅ) பிள்ளைமதி - குழவித்திங்கள்;

மிக்கநல்லோர் புத்திமதி வேணவிதமே சொலிவா
சிக்கவைத்தும், என்றன் மதி சீர்படவே இல்லையம்மா!
தக்கபுத்தி நீ கொடுப்பாய்! தாருகனைச் சங்கரித்துக்
கொக்கரிக்கும் முக்கணியே! கோமதித்தாய் ஈச்வரியே! 19

(கசு) சொலி - சொல்லி, வாசிக்க - கற்க, முக்கணி - மூன்று கண் உடையவள்.

பொட்டிலகு நன்னுதல், நின் பொற்பதந்தா! வெற்பரசி
மட்டில்லா ஆசையுடன் வள்ளத்(து) அமுதருந்தித்,
தொட்டிலில் வைத்(து) ஆட்டித், துதித்'தோடி வா'வெனக் கை
கொட்டி யழைக்கும் குழந்தாய்! கோமதித்தாய் ஈச்வரியே! 20

(உ0) நன்னுதல் - விளி, வள்ளத்து - வட்டிலில்

மாகனஞ்சேர் புற்று மருந்துடன், நீ ஆடும் அபி
டேக மஞ்சட் காப்பணிந்தென் தீவினையும் தீரேனோ?
நாகவனந் தன்னில்வந்து நாகர்சங்க பத்மர்தொழும்
கோகனகத் தாளுடையாய்! கோமதித்தாய் ஈச்வரியே! 21

(உக) மா + மனம், கனம் - பெருமை, ஆடும் + அபிடேகம் + மஞ்சள் + காப்பு

வஞ்சம் அதினோடு, சகவாசம் அதிகம் படைத்தேன்!
வெஞ்சமதிக்(கு) ஏகா விதஞ்சமதித்(து) ஆள்வதுண்டோ?
கஞ்சமதித்தே, மகிழ் பிரகாச மதிவாள் முகத்தாய்!
கொஞ்சமதி யேன்தனையாள்! கோமதித்தாய் ஈச்வரியே. 22

(உஉ) வஞ்சம் + அதினோடு சகவாசம் - (தீய) சேர்க்கை, வெஞ்சமதி - கொடிய சமாதி; இறப்பு (ஏகாவிதஞ்) சம்மதித்து - இணங்கி, கஞ்சம் - மதித்தே, கஞ்சம் - தாமரை, கொஞ்சமதி - சிற்றறிவு

அம்பிட்டுக் குற்றி அடிப்பராம்; வெய்யகிட்டிக்
கம்பிட்டுப் பாசமதாற் கட்டுவராம், வெட்டுவராம்!
வம்பிட்ட காலரென்முன் வாரா(து) அடிமைகொள்வாய்
கும்பிட்டேன், அம்மா! என் கோமதித்தாய் ஈச்வரியே. 23

(உங) கிட்டிக்கம்பு - இறுக்குங்கோல், வம்பு - கயிறு

கேடா வருநமனைக் கிட்ட வராதே, தூரப்
போடாவென்(று) ஓட்டிவிட்டுன் பொற்கமலத் தாள்நிழற்கீழ்
வாடாவென்(று) என்னை வரவழைத்தால், அம்மவுன்னைக்
கூடாவென்(று) ஆர்மறிப்பார்? கோமதித்தாய் ஈச்வரியே! 24

(உச) கேடா - கேடாக; உயிர்க்குக்கேடாக "போடா" "வாடா" என்பன உலக வழக்குப் பற்றியன.

விஞ்சுபுவி மீதினில்நான் மெத்தவுண்டு பட்டசளம்;
பஞ்சுக்குங் கூடஇந்தப் பாடெழுத வில்லையம்மா!
நஞ்சுமரம் ஆனாலும் நட்டவர்கள் வெட்டுவரோ?
கொஞ்சுங் கிளிமொழியே! கோமதித்தாய் ஈச்வரியே! 25

(உரு) சளம் - துன்பம், பஞ்சு படும்பாடு என்பது பழமொழி, நான் படும்பாடு உலகோர் நவிலும் பஞ்சுதான் படுமோ? என்ற மொழியை நோக்குக.

சிந்தா குலமுழுதும் தீர்ந்து கடைத்தேறும் வண்ணம்
வந்தா தரிக்க மனம் வருவ(து) எந்நாளோ?
இந்தார் சடிலத் திறைவர் சங்கரேசர் பங்கார்
கொந்தார் குழல்வடிவே! கோமதித்தாய் ஈச்வரியே! 26

(உரு) சிந்தாகுலம் - சிந்தா + ஆகுலம் - உள்ளக் கவலை. வந்து - ஆதரிக்க, இந்து - சந்திரன்; சடிலம் - சடை, பங்கார் - பாகத்தே பொருந்திய, கொந்து - கொத்து; எதுகை நோக்கி மெலிந்தது.

எடுக்குஞ் சனனம் இனியெனக்(கு) இல்லாமல்
ஒடுக்குகின்ற நின்தாள் உவந்து தந்தால் ஆகாதோ?
அடுக்கின்ற போக்குடனே அம்மா, நின் போலும்
கொடுக்கின்ற தெய்வமுண்டோ? கோமதித்தாய் ஈச்வரியே! 27

(உஎ) சனனம் - பிறப்பு.

மேல்வழிகாட்டாய்!மேனை வீட்டில் வளரும்போது,
சேல்விழி மின்னார்களுடன் சேர்ந்து கழங் காடையிலே,
மால்விளைய, வால்வளைசேர் மாயோகர் காதுவரை
கோல்வளையல் ஒலிடுங்கைக் கோமதித்தாய் ஈச்வரியே. 28

(உஅ) மேனை - மலையரையன் தேவி, மால் - மயக்கம், வால்வளை வெண்சங்கு, மாயோகர் - பெருந்தவத்தோராய சிவபெருமான், கோல் வளையல் - அரிய வேலைப்பாடமைந்த வளையல், ஒலிடும் - ஒலமிடும், கைக் - கோமதி இரண்டனுருபும் பயனும் உடன்தொக்க தொகை.

நூபுரத்தாள் ஏத்த நுவன்றருள்வாய், சீவன்முத்தி!
மாபுரச்சீர் ஓங்கு மதுரை உக்ர பாண்டியனாற்
பூபுரக்கும் நாளில் புரிசையுடன் கட்டிவைத்த
கோபுரப்பொன் னாலயம்வாழ் கோமதித்தாய் ஈச்வரியே. 29

(உகூ) நூபுரம் - சிலம்பு, மாபுரம் - பேரூர் - அமராவதி

உம்பர்கோன் தன்பதமும் ஓர்பெரிதாய் நான்மதியா(து)
எம்பர்களும் நம்பி பேரின்ப பத்(து) அன்புதந்தாள்
அம்பகம் மூன்(று) உள்ளாய்! அருள்ஞானப் பால்சுரக்கும்
கும்ப பயோதரியே! கோமதித்தாய் ஈச்வரியே! 30

(௩0) உம்பர் - தேவர், எம்பர்கள் - எவ்விடந்தோரும், அம்பகம் - அழகிய கண், "முக்கணியே" என்றார் முன்னும். கும்பம் - குடம், பயோதரி கொங்கையுடையாள்.

மாமதித் தாழ்சடைச் சங்கரமால் பங்கில் வாழுந் தெய்வம்
தீமதித் தாருகன் ஆருயிர் வாங்கிய தெய்வ, மன்பர்
பாமதித்(து) ஆட்கொளும் தெய்வ, மிராசைப் பதித்தெய்வ,மென
கோமதித் தாயெனும் தெய்வ, மெல்லோர்க்கும் குலதெய்வமே. 31

(௩க) சங்கரமால் - மால்வடிவம் ஒரு பாதியாக் கொண்ட சங்கரேசர் தீமதி - தீய அறிவு, பாமதித்து - பாக்களை அன்பால் ஏற்றுக் கொண்டு, குலதெய்வம் - "தன்னை நிகரில்லாத தனித்தலைமைத் தெய்வம்"

---

சென்னிகுளம் அண்ணாமலைக் கவிராயர்
அவர்கள் இயற்றிய

# கோமதி அந்தாதி

(சங்கரன்கோவில் கோமதி அம்பாள் மீது பாடப்பெற்ற இந்நூல் 100 செய்யுட்களால் செய்யப்பட்டிருக்க வேண்டும். ஆனால் கிட்டியது 44 செய்யுட்களே)

## விநாயகர் காப்பு

கட்டளைக் கலித்துறை

பாரம்பரியம் புகழ்சேர் புன்னாக பதிஉறைவாள்
கூர்அம்பு அரிஅம்பு கம் கைகொண்டார் பங்குறைபரை முத்
தாரம்பரி அம் புதுத் தனக் கோமதியாள் துதிசேர்
ஏரம்பர் இயம்புவார் என்தன் நா இருந்து என்றைக்குமே.

## நூல்

திருக் கோமதிக்கு வரராசை வாழும் திகம்பரிக்கு – ஈ
சருக்கு ஓம்அது இக்குரசம் எனச் சொற்றவன் தந்தவட்குக்
குருக்கோமதிக் குளிர்ஆனைத் தாட்கு அன்பு கூர்வது அல்லால்
சுருக்கோ மதிக்குள் மற்றோர் தெய்வம் நாடத் துணிந் திலமே.1

திலகம் தரிக்கும் சிறுதிங்களார் மயல் சிக்கு இடைப்பட்டு
இலகுஅம் தருஇக்கு மென்சொல்லால் இடைந்தஎன் ஏழை நெஞ்சே
நல கந்தர் இக்குஞ்சரம் பால் அருந்தும் நகில சலஞ்
சல கந்தரிக்கும் வரராசையில் சொல் நித்தம் கவியே. 2

தங்கவட்டு ஆகரச்செப்பா? மதுரம் சருக்கரை – ஊ
துங்கவட்டா? கரகச்சுவடா? என் சுவர்க்கங் கொண்ட
வெம் கவட்டு ஆகரது ஆவல்உறாது என்னை மீட்டுவள்ளை
அங்க அள் தா கரளம் கண் புன்னைத் தலத்து அம்பிகையே. 3

கைத் தந்தத் தும்பிகள் விண்தும்பி ஒப்பப் பொன் காவணம் தோய்
முத்தம் தத்தும் பிரபை புன்னையூரின் முதல்வியை உள்
வைத்து அந்தத்தும் பிறப்போடு இறப்புங்கெட மஞ்சுஅனக்கோ
வித்தந்தத் தும்பினன் வந்தாலும்குட்டி வெருட்டுவரே. 4

வெருட்டப் பணிநஞ்சு விண்ணோர் அலறவிழுங்கிக் கண்டம்
இருட்டப் பணி நம் சுத்தன் கணப்போதும் இருப்பது உண்டோ
மருள்தப்பு அணிநஞ்சு உழலார் மன் புன்னை மனோன்மணி
தெருட்டப் பண் இனம் சுவைவாய் மருந்து உள் செலாவிடினே! 5

செல்வம் தமர்அவள் தாள் தொண்டர் என்கிலர் தென் பொதிகைக்
கல்வந்து அமர் அங்கசத் தளத்தால் எய்ப்பர் கண்டு உய்வரோ
வில்வம் தமர நதியோடு அணி துகிர் வெற்பினிடத்
தில் வந்த மரகதக் கொடியாம் புன்னைத் தேவியையே! 6

தேவி துவதன பூதரி சீதரி தென்புன்னை வாழ்
மாவிது வதன மாதேஅன்றித் தெய்வம் மற்றும் கொள்வர்
ஆ இதுவதனமா விக்கிடும் என்று அறிந்தும் வச்ச
நாவிது அதன வம்பரைப் போல் சிலர் நானிலத்தே! 7

நான் புரியேன் கொடும் பாவமல்லா வினை நாளும் கொலை
நோன்பு உரியேன் துயரும்தவிர்த்து ஆண்டதை நோக்குறுங்கால்
வான்புரி ஏன்? மலர்ப் புன்னை மின்யாரையும் வாழ்வித்தல்பொய்
ஏன்? புரி ஏன்? கதைஏன் பகடுஏன் நரகு ஏன்? நமனே! 8

ஏனம் கிளைத்துக் கிளைத்து அரும் பாதலத்து ஏகி உடல்
தான்அங்கு இளைத்தும் அறியாப் பதமலர்த் தாணுவை விண்
மீனம் கிளைத்துணரோடு ஒளிர் புன்னை விமலை அபி
மானம் கிளைத்துரகன் பெற்று யோகத்தை மாற்றினனே! 9

மாற்றைக் கரத்து அந்த மாறன்கொண்டு ஒச்சவும் மாமதியக்
கீற்றைக் கரத்து அந்தப் பூண்விட்டுக் கேமணமே கவலும்
நீற்றுஐக் கரு அத்தம் தவாது உறைந்தாய் புன்னை நீள்மனைநின்
மேல்தைக்க ரத்தம் ததும்பும் என்று ஓர்ந்தும் விலங்கிலையே. 10

விலங்கா புள் இனங்களா புற்களா உற்பவித்து எய்த்த நித்
திலம் கா புளினம் தடந்தோறும் இமைக்கும் நின் செல்வப் புன்னைத்
தலம் காப்புள் இனம் படிந்தாம் சுக ஆனந்த சாகரத்தில்
பல் அங்காப்புளி நஞ்சு ஒழுகு ஆபரண மெய்ப்பாக மின்னே. 11

பாகக் கவிக்கு உறும் பேறுஎன நின்புகழ் பாடுகிலா
வேகக் கவிக்குறும்புச் சிந்தை யேற்கும் விரைநறவு ஊண்
நாகக் கவிக்குறும் வண்டு ஆர்க்கும் புன்னை விமலை அமுது
ஏகக் கவிக்கு உறுகண் கடைக்கு ஈவை நின் சேவையையே. 12

சேவைச் சமயம் பெறாது அயன்மால் நிற்ப தித்திப்பு உறா
பாவைச் சமய அச்சனுக்கு எளிதால் பதம்தந்து பொய்
கோவைச் சமயங்கள் கொள்ளேல் என்று ஆண்டன
கொல்லை முல்லை
பூவைச் சமய் அவிரும் கூந்தல் புன்னைப் புராதனியே. 13

புராதனி அம்பணில கந்தரி புன்னைப் பொன்என் நெஞ்சகம்
ஓர்ஆதனி அம்பு அணியும் சடையார் பங்கில் உத்தமியே
இராதல் நியம்பணி சுற்று சரீரம் என்று எண்ணித் தொழ
வராது அனியம் பணி நிற்பார்க்கு என்றோகதி வாய்ப்பதுவே.14

வாய்க்கஅள் அக்கு அரையான் போற்று புன்னை வனிகனிதேங்
காய்க் கவளம் கரைஇல்லா மதவிகடக் களிற்றைத்
தீய்க்க அளக்கரை வேல் ஏவியைப் பெற்ற செல்வி இந்தப்
பேய்க்கு அவள் அக்கரை கொண்டு அருள்ஈந்தது ஓர்
பேதைமையே. 15

பேதையர் ஆவலை மாற்றேம் அவர்தம் பெரும் நிதம்ப
வாதை அரா அலைக்கத் தளர்ந்தேம் கன்றின் வானைமுட்ட
ஓதை அரா அலைப்பால் சாய்க்கும் புன்னைமின் ஊழ்வன்கருந்
தாதை அராவலை என்றால் அருளாதலால் உய்யமே! 16

தாலக்கைப் பாரக் களிறு ஈன்ற புன்னைத் தயாபரியே
பால்அக்கு ஐப் பாரதிபொன் கங்கணத்தைப் பறித்தவன்மாந்து
ஆலக் கைப்பு ஆரமுதாக்கும் மைக்கண் அருளைக்கண்டு உம்தம்
மாலக்கைப் பாரவர் எல்லாம் அடைந்து வணங்குவரே. 17

வண்ண விருத்தத்து அனந்தம் சொற்று ஆள்பரை வாழ்த்துஅலரப்
பண்ண விருத்தத் தனம் அவைதான் என்னுள் பால் இருசேய்
உண்ண விருத்தத் தனம் சற்று உறாது கச்சு ஊடு உறுங்கும்
கிண்ண விருத்தத் தனத்தாய் புன்னாக பைங் கேகயமே. 18

கேகய வாகனன் கைநின்று சூரர்கிளை அறுத்தாய்
மாகயம் வாகுஅனம் ஆர்க்கும் புன்னைப்பதி வாலை வந்துஆள்
சேகயவாக நமன் கொண்டு இருவிழி சேந்து அதட்டி
ஏ! கயவா! கனல் வீழ்வாய் எனத் தள்ளிடா முன்னமே. 19

இடபம் பரசு உவணம் ஐம்படை வெள் எகினம் தண்டம்
விடபம் பரசும்தென் நாகாடவி உறை மின்னை பொன்ம
குடபம் பரசுவாகக் கோமதியைப் பொங்கும் தரங்கங்
கபடம் பரசும் ரூபம் மான் நெஞ்சுஊடு என்னில்
கைக்கொள்வரே. 20

கொட்புஉற்று இருப்பு நிறக்கூற்று உருளக் குமைத்தவன்வன்
கட்புல் திருப்புதுத் தோலாடை சங்கரனொடு பாந்
தட்புற்று இருப்புறு கோமதித் தாயருள் சற்று உறுமேல்
எட்(ள்)புல் திருப்பும் பரானந்த வீட்டிற்கு எவரையுமே. 21

எவன மடந்தையரைப் பொய்யரை மற்று எயில்விரக்க
கவன மடந்தைக்கு அலரைப் புல்லேன் குடங்கை யிடத்துப்
புவனம் மடுஅந்தை அறிந்தான் பணியும் ஐம் புன்னைவன
சிவன்நம் அடுஅந்தை மெய்க் கோமதியாயின தேர்ந்தனமே. 22

தனச் செருக்கால் உதட்டைத் திறவாப் புல்வர் தம்மைப்புகழ்
என் நச்சு எருகாலும் முன்நின் பணிக்கு ஆக்குதி ஈரம் இல்லாச்
சினம் செருக்கால் உருளக் காலின்அட்ட நல் தீரன் மது
பல்நச்சு எருக்கு ஆலும் சடையானைத் தோய் புன்னைப்
பைங்கிளியே. 23

பைநாக வடங்களிலோ நின் கேள்வன் பதக்கத்திலோ
கைநாக வடத்திலோ ஐயம் வாங்கும் கபாலத்திலோ
மைநாகம் அடர்கரும்பு உளக்கும் புன்னை வாழ்மயில் சொல்
வைநா கவடம் உறாது ஆவல் உற்று மருவியதே! 24

மருவித் தினம் முத்தம் இட்டுப்பின் ஊடும் மடந்தையர்கள்
தெருவித்தின முத்தம் வெண்ணிலா ஆர்புன்னைத் தென்பதிக்கு
வரு வித்தின முத்தர் முன்தாள் எற்கு ஈந்தனள் வாழ்க கற்பம்
துருவித் தினம் முத்தமிழ் வடகாரத்தில் சூட்டுதுமே! 25

சூட்டு அனம் மேயும் பணை வரராசைச் சுகுணி மணிப்
பூண்தனம் ஏயும் பைம்பூங்கொடியே பொன்பொருப் பொருதுஓர்
கோட்டன் அமே உம் புகழ் பதம் கஞ்சம் சங்குக்குள் கரைத்து
ஊழ்தனம் ஏயும் துளும் கடைநா வந்து உதவுவையே! 26

உதவாக்கை கல் நடுங்கும் கரும் சிந்தை உலோபரை மன்
மதஆக்கை கன்ன மழை முகிலேஎன்று வாழ்த்தலை புற்
புத ஆக்கைக்கு அன்னம் இடற் பொருட்டாய் செப்புவார்உயர் சூ
முத வாக்கைக் கன்னம் புகக் கோமதிக்கே மொழிந்திலரே. 27

மொழிச் சத்தியம் மருந்துக்கும் சொல்லார் செய்வர்
மோசம் வஞ்சம்
விழிச் சத்தி அமர்உந்தும் தையலார் நட்பைவிட்டு முத்தர்
வழிச் சத்தி அமரும் துங்கப் புன்னைப்பதி மான்மியத்தைப்
பழிச்சு அத்தியம் அருந்தும் வாய் வெட்கத் தமிழ் பாலிப்பளே. 28

பாலி அம்பாலிகை என்று மின்னார் கரம் பற்றிவளை
கோலி அம்பாலிகை நீ என்னையும் தொண்டு கொண்ட புண்ய
சாலி அம்புஆலிகை வெண் பாண்டில் ஊரும் தரங்கக் கங்கை
மோலி அம்பாலிகை வாயி புன்னைப்பதி முக்கண்ணியே. 29

முக்கணி ஆடும் மயிலாள் ஐ ஊடும் முளை விளைத்தாள்
அக்குஅணி ஆடுவர் வெற்பிடத்தாள் புன்னையாள்
என்குற்றத்தைக்
கணியாள் துணைத் தாள் தஞ்சு உறாப் பெருந் தாமதர்கள்
செக்குஅணி ஆடும் பொழுதோ அறம்செய்திறம் சேர்வரே! 30

வராக மருப்பு மதாணியன் செங்கை வருடப் பொறா
இராக மருப் புண்டரீகப் பொன் பாதத்து இளம்குயில் தண்
பராகம் அருப்புஉமிழ் புன்னையின் அன்றி என்பாக் கொள்வர் மாந்
தரா ? கமர் உப்புச் சுதை சுவை காணத் தருவது உண்டே! 31

தகுவர் அப்பா தங்க ஒட்டார் ஒட்டார்எனத் தாகத்தில் – க
ருகுவர் அப்பு ஆதங்கம் இன்றி உண்பாள் அமுது உம்பர்கள் – மூ
துகுவர் அப்பா தங்களோடு அன்று வேலர் தந்தோய் புன்னையாய்
மிகுவரப் பாதங்கம் யான் பாகு நீஅதன் மேல் மணியே! 32

மேனி தவள உருத்திரன் பாகம் விடாது உறையும்
மானி தவள உதை கனதன வல்லி மலர்ப்
பூநிதம் வளம்உயர் புன்னையாள் அருள் புல்லும் புல்லும்
தேன்இது அவ்வளவும் தித்திப்பு என்று என் கவி செப்புறுமே.33

உறுதி வசனம் ஒன்று ஓதுவல் கேண்மின் உவட்கு உவர்கு
முறுது இ அசனம் குமட்டுது தோய் என மூர்க்கரைப் – பு
கல்துதி வச நம்பிக்கை மடந்தாய் புன்னைக் கன்னி மருள்
இறுதிவசம் நமனை அன்றிஇவர் உமக்கு என் செய்வரே! 34

என்னதவம் புரிந்தாலும் பெறீர் இ அவனம் பல் நூல்
சொன்னதவம் புரிவால் உமக்குஉய் வகை சொல்லுவன்பொன்
உன்னத அம் புரிசை வரராசை உற்று உச்சி மிசை
சன்னதம் அம்புரி அன்புஆகி தாள்தொழில் சார்வர் மெய்யே! 35

சாரங்கம் சோடு உள்ள கண்புருவம் புன்னைச் சங்கரியை
வீரம் கச்சோடு புரி தனத்தாளை விலங்கும் சங்கக்
கீரம் கச்சு ஒடும் பொழுதேனும் உன்னுகிலார் எனில் சேர்
வார்அங்கு அச்சுஒடு உடைத்து என்னத் தகர்க்க நமன்படரே. 36

படப்பதக் கத்தன் சிலை மன்றுள் தாண்டவம் பண்ணுகின்ற
நடப்பத கத்து அன்றிலானைப் பகைத்த நயன உண்ட
விடப்பது அக்கத்தன் தினம்பணி கோமதி மெய் அன்பர் மாள்
கிடப்ப தக்கது அன்றி மால்மணி மீஈயினும் கேட்பதன்றே! 37

கேட் பத்தரம் இலை உன்னடியேன் அன்றிக் கேடில்திரி
நீள்பத்தர் அமிலையும் புரியேன் என்னை நீ அருள்வாய்
காட்பு அத்தர் அம்இல் ஐயில்உற்ற நாள் பயங்காரம் என்பர்
சூட்பத்தரம் இலைதோய் புன்னையாய் கண் சுறவு அமர்க்கே. 38

சுரம் தொண்டு அரையும் புல்லாங்குழலோன் பணிதோகை அம்அம்
பரத்து ஒண்தரை உறுவாழ்கை எண்ணேன் எண்ணும் பாதமது என்
சிரத் தொண்டரை முடிசேர்ப்பை புன்னாகச் சிவைதினமும்
வரத்து ஒண்தரு ஐந்து எழுத்து ஓசைசெல் விதி எம்மான்
பிணையே. 39

மானா பரணர் உறை வரராசை மின்வள்ளி இவள்
தான் ஆபரண் உறைவாள் என்று போற்று கந்தர் பயந்த
நீ நாப அரணம் நெருநலின் தீர் மகன் நெஞ் சு உறைந்தால்
பால் நா பரணர் முதலோர் வெள்கக் கவி பாடுறுமே! 40

பாடலம் பூ மழை பெய் வரராசையில் பார்ப்பதியின்
தேடலம் பூமன் அரிஎன் செய்தார் மணப்பந்தரின் அள்
தோடு அலபூம் மனை ஆமளையே அடியாரை அன்றிப்
பாடலம் பூமலர் தூவிலம் மற்றும் ஓர் பண்ணவர்க்கே. 41

பண்ணலம் மோய்உ விணைக் கிழவோர்க்கு அருள்பார்வை நல்கும்
நள்நலம் மோய உவா ஆனனத்தாய் என்றும் நாட்டுவனே
திண் நலம் ஒயும் சினை வளை தாக்கும் தண்செய்ப்
புன்னையின்
அண்ணல் அம்மோய் உகம் மாறினும் நின்கழற்கு அன்பினையே. 42

அணிச்சக் கரம் மருச் செந்தாமரையர் அருந்தவரை
முனிச் சக்கர் அமர்உந்தும் இபக்கொங்கைக்கு மூசல்செயும்
மன்இச்சக்கர் அமருக் குங்குமம் சேர்த்து உய்மின் மாதவர்க்குப்
பொனிச் சக்கரம் அருள்தாய் மலர்ப் புன்னைப் புராதனியே. 43

புராதனி அம்பிகை கௌமாரி மாரி புன்னாகி மலை
இராதன் இயம்பி கைகூப்பி மகிழும் யாமளை ஓம்
ஓர் ஆதனி அம்பி கைமாறு இன்றி அன்பரை ஏற்றி கரு
வாராது அனியம்பணி எண்ணாது அருளும் மனோன்மணியே. 44

வண்ணச்சரபர் பேரர் தி.செ. முருகதாச சுவாமிகள் அருளிய

# சங்கரநாராயணர் பஞ்சகம்

## காப்பு

பொங்கரவம் பூண்ட புராரி திருவுருவம்
சங்கணிகை மாயன் தனதுருவும் – மங்களமாய்ச்
சார்ந்தொர் திருவுருவாம் சங்கரநா ராயணர்பாட்டு
ஓர்ந்துரைக்கச் செய்குவன்வே லோன்.

## நூல் – கொச்சகக் கலிப்பா

பொங்கழலும் நீரும் இந்தப் புவியினில் வாழ் உயிர்களுக்குத்
தங்கவரும் ஆதரவாம் சத்தியத்தைக் காட்டுதல் போல்
துங்கமழு வுடன்ஆழி தோலுடைபொன் ஆடைகொண்டாய்
சங்கரன்கோயிற் கணவிர் சங்கரநாராயணனே. 1

இரவுடனே பகலு பகலுமொன்றாய் இசைதலின்நின் காருருவும்
பரவு வெண்ணீற் றரனுருவும் பப்பாதி யாக்கொண்டே.
அரனுடனே அரியும் வெவ்வேறு அல்ல ஒன்றே யாமெய்மைத்
தரமுணர்த்தி ஒருருவாம் சங்கரநாராயணனே. 2

எக்கால முந்தவத்தில் ஏய்ந்தோர் மூச்சுக்காற்றாய்
புக்கோடி வருமிரண்டும் பொருந்து சுழிமுனையொன்றாய்
மிக்காகும் யோகநிலை மேவு நிசத்தினைவிளக்கித்
தக்கோர்கள் அறியவுற்றாய் சங்கரநாராயணனே. 3

ஓங்குபெரு நீதியுடன் உயர்கருணை ஒன்றாகும்
பாங்கினில் அழிப்பினுக்கும் பாதுகாப்புக்கும் உற்றே
ஆங்கமையும் ஈசனுடன் அன்புருவாம் நீயுமொன்றாய்த்
தாங்குருவம் பெற்றிவிர்ந்தாய் சங்கரநாராயணனே. 4

சடைசேர்ந்த பொன்முடியும் தனிமழுசங் கார்கரமும்
விடையோடு புட்கொடியும் மேவுபிறவுங் கொடெம்மை
உடையானே உனையறியும் உணர்வளித்தாய் வினைத்தீமைத்
தடையகற்றி ஆண்டருள்வாய் சங்கரநாராயணனே. 5

## பயன் - வஞ்சி விருத்தம்

சங்கர நாரணர் தந்துதி
இங்கவிர் பஞ்சகம் என்றபேர்
தங்கிட முருகதா சன்சொல்பா
பொங்குவப் மெய்தப் புரியுமே.

---

தேவகோட்டை வயிநாகரம் பாலகவி வே. இராமநாதன் செட்டியார்

# கோமதியம்மை பஞ்சரத்தினம்

சங்கர லிங்கம் தழுவா வுடையம்மை
ஐங்கரன்சேய் பாத மரண் (காப்பு)

## நூல்

மணியார் பொருநை வளநதியு
மாண்பார் வைகை நறுநதியு
மறுவித் தெளிநீர் தரவோங்கும்
வழுதி நாட்டிற் குறுமுனிவன்
தணியா வுவகை யுடனாளுந்
தழைக்குந் தமிழை வளர்ப்பதற்குச்
சார்ந்து வளர்வண் பொதியவரை
தரும்பன் னலங்க ணிறைத் துயர்ந்து
பணியாரவ மதிபுனைந்த
பரமனிடப்பாற் றிருமேனிப்
பங்கு கொடுத்துத் திருமாலைப்
பரிந்து மகிழ்ந்தேற் றுறைவதனால்
அணியா ரிசைச்சங் கரநாரா
யணப்பே றுறக்கொண் டமர்பதியில்
அருள்சூற் கொண்ட கோமதிப்பேர்
அம்மே அருள்க அருள்கவே. 1

மண்ணீர் தீகால் வானென்ன
மருவு பூதத் திருப்பதிகள்
மதிசேர் சடையான் மகிழ்வதென
மதிப்பர் மதியோர் வாழ்வுதருந்
தண்ணீர்த் தாரு காபுரஞ்செந்
தழலான் கருவை நல்லூர்சீர்
சார்கால் தடவு தென்மலைவான்
தகவிற் தேவ தானமென
வெண்ணீ ரிரண்டு திருப்பதிகள்
இலங்கிப் பாங்க ரிசைபெருக்க

வீரே முலகந் தொழநிலத்தெம்
இறைவன் ஒரு சங்கரனாகக்
கண்ணீர் பெருக்கித் தொழுமடியர்
களிப்ப வுறையுந் திருப்பதியிற்
கருணை சூற்கொள் கோமதிப்பேர்க்
கனியே அருள்க அருள்கவே. 2

பாம்பு காணிற் படையெனினும்
அஞ்சு மென்னப் பழமொழிகள்
பகர்வ ரொருத்தி பாம்போடு
பழகேலென்னப் பரந்துரைத்தாள்
வீம்பு பெருக்கிப் பாம்புடலில்
மேவ வணிந்த விதமன்றி
விளைக்கும் விடப்புற் றினைமகிழ்ந்து
விளங்கி வியப்பை மிகப் பெருக்கித்
தேம்பு மடியா வினையொழித்துச்
செய்ய பதப்பே ரின்பருத்தத்
திகழ்சங் கரனார் மகிழமுதே
சீவ ராய வனைவருக்குஞ்
சாம்பு நாதமாந் தனித்தாயே
தடந்தோ ளிமவான் றருகுழந்தாய்
தகவா ரருள்சேர் கோமதிப்பேர்த்
தையால் அருள்க அருள்கவே. 3

சங்கன் பதும னெனுமிருவர்
தலையா முணர்வு வந்தணையாத்
தன்மை யதனாற் சிவனுயர்ந் தோன்
சங்க னுயர்த்தோ னெனப்பொருது
தங்க ளுணர்வான் முடிவறியார்
தவிக்க வாக்க லளித்தனலஞ்
சார வழித்தன் முதலாகத்
தரணி யுயிர்கண் மலந்தொலைப்பான்
பொங்கு தொழில்கண் மூன்றனையும்
புரிவோர் சிலர்தன் னாணைவழி
போற்றி நின்று செயலாற்றப்
பொருள்க ளனைத்தும் புகுந்துநின்றும்

எங்குங் காணா வொருபொருளாய்
இலங்கும் எங்கள் சங்கரனின்
இடப்பான் மணியே கோமதிப்
பேரேற்றாய் அருள்க அருள்கவே. 4

உனக்கே உரிமை யாயவிடப்
பாக மதனை யுலகளிக்கும்
ஒருவன் உனது தமயனுற
உவந்தாய் உலகில் எவளேனுந்
தனக்கே உரிய வாழ்வுயிறர்
சாரச் சிறிதுஞ் சம்மதியாள்
தாதார் குழல்சேர் ஆவுடையே!
தகையாம் உனது வாழ்விடத்தை
மனக்கே மகிழ்ந்து மாற்களித்து
வயங்கு வடிவங் காண்ணென்ன
வளருந் தவஞ்செய் திருந்தனை நீ
மிங்காய்! நெல்லை வாழ்வுடையான்
எனக்கே யன்பு மிகுநண்பன்
இசை கோமதிநாயகன்பணி கொண்டு
இலங்கு திருவே கோமதிப்பேர்
ஏற்றாய் அருள்க அருள்கவே. 5

---

**வாழ்த்து**

கோமதி யம்மை குளிரு மலர்ப்பதங்கள்
சேமமொடு வாழ்க சிறந்து.



திருநெல்வேலி பேட்டை, சித்தாந்த பண்டித பூஷணம்
திரு. **ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை** அவர்கள் இயற்றிய

## அருள்மிகு சங்கரலிங்க சுவாமி

# கோமதி சதரத்ந மாலை

### காப்பு

சங்கரன் கோயில்அமர் சங்கர லிங்கனார்
பங்கில்உறு கோமதித்தாய் பாதமலர் – பொங்கு தமிழ்
யாப்பால் இங்கு ஏத்துவேன் யானைமுகத் தெய்வமே
காப்பாக உன் பொற்கழல்

### நூல்

பாரதமே திருநாடு பரசிவமே பரபதி
யாரணமே யாகமமே அருள்தரு நூல்அதில், சுரக்கும்
சாரமதே சைவம் எனுஞ் சற்சமயம் எனநாயேன்
தேரஅருள் செய்தனையே சீராசைக் கோமதியே. 1

கதிரோனின் புதிநேர்வன் கதிர் நேர்வை நீயன்றோ
மதிவாணர் போல் வருனை மாயை என்பர் அதனால்உன்
பதியாரைச் சடம்எனவும் பகராமற் பகர்வாரா
யதிசோகதுறு வரந்தோ வருள்ஞான கோமதியே. 2

ஊனுடலே உயிராகும் உலகே வீடாகும் எனும்
ஈனமதிக்கு இரையாய் நான் இறவாமுன் நின்தாளில்
யான்றவென் றலைசார்த்தி யின்பாரு நாள் உளதோ
கான்அமரும் என்கூந்தற் கலியாணி கோமதியே. 3

ஆங்கிலமே திராவிடமே ஆரியமே யாம் பலவும்
பாங்குபெறக் கற்றாலும் பயன்என்கொல் சுமையன்றே
தேன்கமழ் உன் சீபாதஞ் சிந்திக்கக் கற்பதொன்றே
ஓங்குநலம் என்று உரைத்தாய் உலகளிக்குங் கோமதியே. 4

என்அன்னை தந்தை அன்பால் என்உடலை வளர்த்ததுபோல்
பொன்அன்ன நின்சீரைப் புரிந்துரைக்கும் திறலினையும்
நன்னரிவண் வளர்த்திட்டார் நான்செய்யும் கைம்மாறுளதோ
என்உள்ளமும் எவருள்ளமும் இருந்தாளும் கோமதியே. 5

ஆண்டு அறுபதாக எனை ஆதரித்தவாறே போல்
வேண்டுவன தந்து இன்னும் மேதினியிற் காவாயோ
பூண்தவிரும் வடிவாளே புந்தியிலேன் அஞ்சுகிறேன்
தாண்டரிய பிறப்பறுக்குந் தனிஅமுதாங் கோமதியே. 6

புத்திர புத்திரிமாரும் பொருளாக வேண்டும் எனில்
அத்தனையும் புண்ணியம் நான் ஆற்றிடுதல் வேண்டாவோ
இத்தனையும் அவ்வறந்தான் இயற்றிலேன் ஐயோ நான்
எத்தனையும் கீழ்எனினும் எனக்குஇரங்கு கோமதியே. 7

பலகலைகள் கற்றால்என் பகுத்தறிவு பெற்றால்என்
உலகநடை சிறந்தால்என் உபகாரம் புரிந்தால்என்
மலம் முழுதும் நீங்கி யின்ப மருவுவதை வேண்டாத
கலதிகளுக்கு உயிருளதோ கட்டழகு கோமதியே. 8

பீடேறு உன் பொருட் புகழைப் பேசி மகிழ்ந்தேத்தாத
நாடேதான் மொழியேதான் நவில்நூல்தான் மானுடந்தான்
காடேயாஞ் சலசலப்பாங் கடிநூலாம் விலங்கேயாம்
ஈடேயோ எடுப்பேயோ இல்லாத கோமதியே. 9

அணியார்உன் விழாநாளில் அலங்காரம் பலகொண்டு
மணிவீதி முழக்கோடு வருநின்னைக் கண்டக்கால்
பணியாத தலை பணியும் பாடாத வாய் பாடும்
தணியாத சிந்தையுந்தான் தணிந்தொடுங்கும் கோமதியே. 10

சிவபூசை என்முன்னோர் செய்பயனால் நாயேனும்
அவமே நாள் போக்காமே யான்மட்டும் நின்புகழைத்
தவறாமே படித்திடுவேன் சாற்றிடுவேன் எழுதிடுவேன்
உவமானங் கடந்தாளே உயக்கொள்வாய் கோமதியே. 11

தரித்திரமே இடையூறாத் தரித்திரந்தான் நீங்கிடிலோ
திருத்தியுறத் தொழலாம் நின் சேவடியை என்பாரால்
அருத்தம்உளார் உனை மறந்திங்கு அரக்கர்என அலைவ தென்னே
உருத்திரனார் உளம்அகலா ஓவியமாங் கோமதியே. 12

புத்தழகி யானால்என் பொற்றுகில் பூண்அணிந்தால் என்
வித்தையிலும் பதவியிலும் மிகுந்தால்என் கற்பிலதேல்
இத்தரையின் பேயவளே எத்தகைய சிறப்பினளும்
அத்தகைய ளாவாள் உன்அடி மறந்தால் கோமதியே. 13

யாதுபொருள் யார்உற்றார் எதுவுமிலேன் எதிர்காலஞ்
சோதிடரோ துன்பம் எனக்கு உண்டென்று சொல்லுகிறார்
மாதரசி உன்ஏவல் வழி கிரக சஞ்சாரம்
ஆதலினால் அபயம் எனக்கு அளித்தருள் நீ கோமதியே. 14

பாலன்எனக் குமரன்எனப் பலபருவத் தனயருக்கு
வாலமுதம் வெவ்வேறாய் வழங்குவள் நற்றாய் அதுதான்
சீலமறும் வஞ்சகமோ சிறியேமுக்கு அவள் செயல்போல்
சாலவருள் நீ புரிதல் தானும் அன்றோ கோமதியே. 15

படங்காணப் போவாரே பரமசிவன் வீற்றிருக்குந்
தடங்கோயில் சூழாரே தனிமுத்தி யிந்தா வென்று
அடங்கலும் நீ அழைத்தாலும் மயங்குவர்தான் வாங்குவரோ
மடம்காதி நின்றார்க்கே வாய்ப்ப தன்றோ கோமதியே. 16

மதபேதம் இருப்பதற்கு மானிடரின் அறிவுபல
விதமாவ தேயேது விளங்கும் உன்அருள் அவர்க்கெல்லாம்
பொதுவாகும் என்பதையே புகன்றந்தப் பேதத்தை
மதியாத மதியும் ஒரு மதியாமோ கோமதியே. 17

பகவதியே மாதேவி பவானி பராசத்தி சிவை
நகமகளே ஜமவதி நாரணியே ஈசையே
ககனம்உயர் அபிராமியுமை கௌரிதிரு ஈசுரியே
தகவுறும்இப் பெயர்கள் எற்குத் தாரகமாம் கோமதியே. 18

சொன்னாலும் வாயினிக்குஞ் சொலக் கேட்டாற் காதினிக்கும்
பன்னாளுஞ் சிந்தித்தாற் பரந்தினிக்குஞ் சிந்தையெலாம்
பொன்னாளுங் கலையாளும் புவியாளும் புகழ்ந்தேத்தும்
அன்னாய்!உன் சரிதங்கள் அற்புதமாம் கோமதியே. 19

பேய்வாயிற் பட்டாரும் பித்துமிகப் பெற்றாரும்
நோய்சால உள்ளாரும் நுழைந்து உன்அருள் சன்னிதியில்
தாய்நீயே சரணமெனத் தவங்கிடந்து சுகமுறுவார்
வாய்மைஇது முக்காலும் மாண்புநிறை கோமதியே. 20

ஆறாறு தத்துவமும் ஆகிநிற்கும் பேரருளே
ஆறாறு தத்துவமும் அடக்கி நிற்கும் பேரொளியே
ஆறாறு தத்துவமும் அலைத்திட இங்குஉனை மறந்தே
ஆறாறுங் கடத்தி யெனை ஆட்கொள்வாய் கோமதியே. 21

அறிந்திடுவாய் தானேநீ அறிவித்தால் அறியும்உயிர்
அறிந்திடுவ அல்லபிற அறிவித்த போதேனும்
அறிந்திடுவர் செய்நன்றி யயர்த்திலரே யாமாயின்
அறிந்திடுமா செய்தஉனை அயர்ப்பாரோ கோமதியே. 22

திருமேனி உயிரென்னத் தேகமென விரண்டின்றி
ஒருஞானப் பிழம்பாவ துனக்குத்தம் உடல் உயிர்போல்
கருவாகும் புலையுடம்பில் கட்டுண்ட வாசனையால்
துருவாதர் அதைக்கூறிச் சோகாப்பர் கோமதியே. 23

சிவபெருமான் நின் கணவர் திருமால்நின் ஐயர்என்பர்
இருவர் ஒருதேவே எனக்காட்டச் செய்தனையால்
தவம்அதனை எனஅயலார் சரிதம்ஒன்று புனைந்திட்டார்
அவம்உனது பெண்மைக்கு அஃது ஆகாதோ கோமதியே. 24

அரியொருகால் இருராமரானான் சூர்பன்மனெனும்
இருவர்ஒரு சூரபன்மன் என்றானார் அவ்வரிபோல்
ஆரிஅரர் ஆவான் சிவனே அச்சூர பன்போல்
அரியரரோ சிவனென்றும் ஆகாரே கோமதியே. 25

சங்கர நாராயணன்பால் சார்ந்திருக்கும் நாரணன்தான்
இங்குவரும் வைணவத்தின் இறையல்லன் அவ்விறைக்குள்
தங்கியதை இயக்கு சிவசத்தி கொள்ளும் மாண் கோலம்
துங்கமறை அவ்வாறு சொற்றிலதோ கோமதியே. 26

சங்கரநா ராயணனே தாணுமால் அயன் இவைதான்
மங்கலறச் சிவநாம வரிசையில்தான் வந்திடுமே
சிங்கலிலாச் சிவன்சர்வ தேவமயன் எனச்சுருதி
இங்குஅறிஞர் உளம்கொள்ள எத்திலதோ கோமதியே. 27

நாரணனே இலக்குமிசெய் நற்றவத்தால் அவள் முன்னே
நாரண சங்கரனாக நற்காட்சி தந்தானென்று
ஆரணமோ நாரணற்கோர் ஆலயமோ சான்றுண்டா
பூரணியே வளமாரும் புன்னைமகிழ் கோமதியே. 28

பரமசிவன் பத்தினியே பரந்தாமன் சோதரியே
கரமுகவன் ஆறுமுகன் கனிந்தேத்தும் மாதாவே
வரமுதவும் நீறுஅக்க மணியணிவார் உளக்கோயில்
திறமுற வீற்றிருந் தருளும் தெய்வதமே கோமதியே. 29

தவவேடம் நீதாங்கிச் சங்கரனை உளத்திருத்தி
உவமானம் இறந்த தவம் உஞற்றி நின்றாய் உவந்து அந்தச்
சிவலோகன் களிறூர்ந்துஉன் திருக்கண்எதிர் காட்சிதர
அவனோடு மகிழ்ந்து சென்றாய் அன்னம் போற் கோமதியே. 30

அன்னியரும் போனார் நாடு அடைந்தது தன் அரசு இந்நாடு
உன் இனிய பதம்ஏத்தி உய்வதுவே இனி வேண்டும்
பொன் அதிகம் திரட்டி அந்தப் பொன்னினையே போற்றி அறம்
தன்னை மறந்திருப்பாரும் தக்காரோ கோமதியே. 31

சத்தனிடம் அடங்கும்அவன் சத்தியெலா நீ சிவனை
நித்தம் அனுசரித்து அதனை நிரூபித்தாய் ஆனாலும்
சத்தி உயர்வு எனச்சத்தன் சத்திசமம் எனப் பிதற்றும்
மத்தரும் இங்குளர் ஆனார் மறைகடந்த கோமதியே. 32

தீரம் இன்றித் திரம்இன்றிச் சிவபக்தி தனித்துஇன்றிச்
சாரம்இன்றி வரம்பின்றிச் சாத்திர ஆதாரமின்றிப்
பாரம் இன்றிச் சைவத்தைப் பாவிப்பார் போற்சிலவர்
ஓரம்ஒன்றிக் குழறுபடை உரைக்கின்றார் கோமதியே. 33

நான்முகத்தன் திருநெடுமால் நல்அரனே இந்திரனே
வான்முகத்துப் பிறரும் என்றும் வந்துன் அடிபணிகின்றார்
நான்மிகுத்து உன் நன்மலர்த்தாள் நம்பாமே தம்உயிரை
ஊன் புகுத்தச் சாவார் இவ்வுல குள்ளோர் கோமதியே. 34

அறம்பாவம் என்னும் இரண்டுஅருங் கயிற்றால் இழுப்புண்டு
புறம்போனேன் உன் அடியைப் போற்றாமல் இதுகாறும்
திறம்பாத பத்தியும் உன் திருநோக்கால் கிடைப்பதன்றே
பறம்பாம் என்மனம் குழையப் பாராயோ கோமதியே. 35

உன் ஆணைக்கு அடங்குகிலேன் உன் புகழே பேசுகின்றேன்
என்னாமோ பயன்அதற்கு என்றுஅறிந்தேன் உன் அறக்கருணைக்கு
அன்னாய் நீ நட்ட மரம் ஆலமரம் ஆனாலும்
இன்னாது அது என்றுஅதனை ஈர்குவையோ கோமதியே. 36

இருவிசும்பார் அசுரரை வென்று இறுமாந்தபோது அவரை
ஒரு துரும்பால் ஓர் இயக்கன் ஒடுக்க அவன் யாரென்று
வெருவியவர் உனைவினவ விளங்குஅரனே எனவிடுத்தாய்
பெருகுஒளியே இமவான்தன் பெருமகளாங் கோமதியே. 37

மூவரையும் உதிப்பித்தாய் மூவரையும் முக்குணத் துறுத்தாய்
மூவரையும் அதிட்டித்தாய் மூவரையு மதிகரித்தாய்
மூவரையும் நியமித்தாய் முத்தொழிலில் என்றென்று
மூவரையுந் தாட்படுத்தாய் முக்கணன்பால் கோமதியே. 38

பட்டாலே பலன் என்னும் பழமொழியைப் போன்றதுவே
பட்டாலும் பலன் சிறிதும் இல்லைஎனும் பழமொழியும்
பட்டாலும் படவில்லை யானாலும் படரின்பம்
பட்டாரின் பழவினையின் பயனன்றோ கோமதியே. 39

குடுமியினைக் கத்திரித்துக் குஞ்சியிலராய்த் தயிலந்
தடவி வகுப்பெடுத்துப் பெண்டகச் சீப்பால் மயிர்சுருட்டி
இடபமெனத் திரிவதன்றி இனமலரிட்டு ஏத்தாரும்உன்
அடி சிலவரவர் வாழ்ந்திங்காம் பயன்என் கோமதியே. 40

வானத்திற் பறந்தால்என் மண்மீது விரைந்தால்என்
வானத்துவில் மனித்த வாழ்வென்னும் மெய்உணர்ந்தார்க்கு
ஞானத்து நாண்மலர்த்தாள் நன்குஏத்தித் தொழுவதுவே
தேன்ஒத்துத் தினந்தோறுந் தித்திக்கும் கோமதியே. 41

உண்ணுவதும் உழைப்பதற்கே உழைப்பதுவும் உண்பதற்கு என்று
எண்ணி வசிமகன் விலங்கின் எவ்வகையில் சிறந்திட்டான்
உண்ணல் உழைப்பு இவற்றினும் உன் உபயபத சேவையே
மண்ணில் உயர்வுஎன்று அவன்தான் மதிப்பதென்றோ கோமதியே. 42

தன்னியலை ஆயாதுஉன் தனியருட்சீர் கேட்டலுமே
இன்னும் அவள் அருளாமைஎன் எனக்குஎன்று அச்சீரில்
தன்னது அவ நம்பிக்கை சாற்றுபவன் மகனேயோ
மன்னும் உயிர் அனைத்தினுக்கும் வாழ்வுஅருளும் கோமதியே. 43

ஈங்குறங்கி யாங்குறங்கார் எய்திடுவர் இன்பமெலாம்
ஈங்குறங்காது ஆங்குஉறங்கி எய்திடுவர் துன்பமெலாம்
ஈங்குறங்கி யாங்குஉறங்கா விதிநீயே எவ்வுயிர்க்கும்
யாங்கும் உறங்காமலிருந்து ஈயவல்லாய் கோமதியே. 44

நன்றுதரு புதுமையென நானிலத்தில் ஒன்றுண்டோ
இன்றியமை யாததென இரங்கிய நீயன்றன்று இங்கு
ஒன்றிவரும் மனிதருக்கு ஒவ்வொன்று உதவல் ஓராமல்
இன்றுபுது மைப் பித்தன் ஏமாந்தான் கோமதியே. 45

துன்புதவுந் தீயவினை சுகமுதவு நல்லவினை
என்பதுவே நியதி சிலர் ஈனவினை செய்து நுகர்
இன்பதனைக் கண்டு மதியிழந்து மறஞ்செய முந்தும்
மன்பதையும் ஐயையோ வாழ்வதுண்டோ கோமதியே. 46

மாதாமாண் கற்பிகழும் மடமகன்போல் எவ்வுயிர்க்கும்
மாதா நீ என்பதனை மதியாரும் உன்னைஅப
வாதுஒதித் தம்ஊத்தை வாய்நாற்றங் காட்டுகிறார்
கோது ஏதோ அவருடல் வந்திடு குலத்திற் கோமதியே. 47

கருக்குவதும் அவிப்பதுவுங் காய்ச்சுவதும் வறுப்பதுவும்
எரிக்குஉள வெஞ்சூடொன்றே இப்பெயர்கள் பெறுமாப்போல்
நிருக்கிளரும் ஒருநீயே செகசீவர்க்கு அருள் முறையில்
இருக்கஉனையும் பலபெயரால் இனிதேத்துங் கோமதியே. 48

ஆண்டவனைக் கண்முன் காட்டுஅவனை யான் தொழுவேன்யென்று
ஈண்டொருவன் பிதற்றுகிறான் என்பு உதிரம் நரம்புஆதி
மீண்டு உடலில் அவன்தன்னை ஈதுஎன்று காட்டுவனேல்
மாண்ட அவன் தன்னையும் யான் மதித்திடுவேன் கோமதியே.49

விரிந்ததிரி மலப்பிடிப்பை வெலமாட்டாது இங்கேநான்
தெரிந்தும் இழிவினைபலவே செய்கின்றேன் அதனாலே
பரிந்து புரந்திடுவாயோ பராமுகமாய் இருப்பாயோ
எரிந்துவரும் நமனார்முன் யாதுசெய்வேன் கோமதியே. 50

மஞ்சளொடு மாங்கிலியம் வாழ்வரசிக்கு அடையாளம்
அஞ்சலில் உன்அடியாருக்கு அடையாளந் திருநீறு
விஞ்சு புகழ்அக்கு மணி வெறுத்தவற்றை உரைப்பவர்தம்
நெஞ்சமதில் அமங்கலமே நிலைகொள்ளுங் கோமதியே. 51

பிறப்பதுதான் இறப்பதற்கோ பிறந்திடவே இறக்கின்றார்
இறப்பதுவும் பிறப்பதும் நீ இரங்காதார் துயரன்றோ
பிறப்பதனுக்கு உறுபயனாம் பிறவாமை அதைஅவர்தான்
இறப்பதன்முன் எய்துவது உன்இச்சை யன்றோ கோமதியே. 52

எங்கிருந்து வந்தோம் இங்குஏன் வந்தோம் இறந்தபினர்
எங்குஉறுவம் என்று ஆயாது இழிவிலங்கு ஒத்து உண்டுஉறங்கி
மங்குமதி யுடையரெலாம் மனம் போனபடி திரிந்துஉன்
பொங்கருளுக்கு அயல்ஆகிப் புதைகின்றார் கோமதியே. 53

வழிவழி ஊன் உண்ணாத மரபினருட் சிலர் அஃது உண்டு
அழிபவரின் கரவுரையால் அதுவேட்டு உன்அருள்மறுத்து இங்கு
இழிவுவருந் தங்குலத்துக்கு என்று உணராது ஊர்சிரிக்கப்
பழிபுலவுண்டு இருள் நரகில் பாய்வதெனே கோமதியே. 54

உண்டு கொழுத் திடுவதற்கே உடலெடுத்த பெரியார்கைக்
கொண்டு செயுஞ் சற்கருமங் குவலயத்தில் ஏதுமில்லை
ஒண்தவ நல் உபவாசத்து உடல் ஒறுத்து உன்அருள்சேர்ந்த
தொண்டினரே அதுசெயுந் துப்புடையார் கோமதியே. 55

உன்அருளின் துணைகொண்டு இங்கு உயர்மறையி னிதயத்துள்
என்உளதென்று ஆய்ந்துஅதனை எடுக்கும் அறிவற்று ஒருவன்
தன்னறிவின் இருமாந்து தலைசுழன்றச் சாத்திரத்துட்
பின்னமுறு பொருள் புகுத்தல் பெட்பாமோ கோமதியே. 56

பேரறிஞர் பலர்தந்தார் பெருநூல்கள் பலஅவற்றால்
சீரடையுஞ் சிலர்நிற்கத் திருந்தாத பெரும்பாலார்
காரணவு தம்அறிவைக் கலகலநூல் மலிந்திழுக்கத்
தூரநெறி போனார்உன் துணைஅடிக்குக் கோமதியே. 57

வேதம் உனது உரையென்னார் வீழ்வது பொய் உன்தாளில்
ஏதுபயன் இவற்றுடன் நின்இயல் விளக்க வந்ததெனப்
போதநிறை புண்ணியர் அப்பொன்னுரையைக் கொண்டுஉனது
பாதம் உளத்திருத்தி யுறு பயன்பெறுவார் கோமதியே. 58

மனம்அது எனைக் கருவீழ்த்த மகனானே எஞ்சிநின்ற
வினைநுகர யான்ஈட்டு வினை பலவாம் வானோருக்கு
இனியமுது வரநினைந்தே இறப்பொழித்தான் பத்தினியே
எனை யதுபோல் வினைநீக்கி ஏன்று கொள்வாய் கோமதியே.59

பலபாவம் புரிந்தாலும் பாறைமனது நெகிழ்ந்து ஒருகால்
நலமாரு உன்நாமம் நாவார நவின்றிட்டால்
இலவாகும் அத்தனையும் எத்தனை தீட்டேனும் அவை
நிலமீதில் ஒருமுழுக்கால் நீங்காவோ கோமதியே. 60

இருக்கையிலே மன்மதனார் என்உளத்தைக் கலக்கிடுவார்
மரிக்கையிலே எனைநமனார் வந்துகொடு போய்வதைப்பார்
இருக்கையிலும் மரித்தபின்னும் இத்துயரை யெனக்கின்றிப்
பிரிக்கைசெயும் படைதான் உன் பேரருளாங் கோமதியே. 61

இன்னிசையும் நாட்டியமும் இன்று வளர்ந்திட்டாலும்
மன்நரரை உன்னருளின் வழிநிறுத்தாது இழிகாமப்
புன்னசையிற் புரட்டலினாற் புன்விலங்கே யவரானார்
என்னபயன் அவைவேறிங்கு ஈந்தனவோ கோமதியே. 62

சாத்திரத்தை அவமதித்துச் சரித்திரத்தை நம்பிநின்ற
மாத்திரத்தே சிவசைவர் மதிவழங்கு பொருள்கோளிற்
சாத்திரத்தை யனுசரித்த சரித்திரமே பொருளென்னும்
நேத்திரத்தை யிழந்துஉன்அருள் நீங்கிநின்றார் கோமதியே.63

சாதியெலா மொழிகசனர் சமனென்னும் பகுத்தறிஞர்
வேதனையாம் முறையெல்லாம் விளிக என்பர் மானமின்றி
ஆதி மகனிடத்து இல்லை ஆக்கினவன் இடையன் என்ற
ஏதுவை அவ்விரண்டற்கும் எடுத்துரைத்துக் கோமதியே. 64

கடவுளையே நிந்திக்கக் கயவருக்குப் பணம் கொடுத்துக்
கடவுளையுங் கோயிலிற் போய்க் கைத்தொழுவர் சிலகபடர்
மடமலியக் கபடரைஉன் வன்கருணை மறத்தால்நீ
அடவருநாள் என்செய்வார் அவர்அந்தோ கோமதியே. 65

பாசத்துக்கு அயலான பத்தியுளார் சித்தியுளார்
நேசித்த மாமுனிவர் நீளின்ப முத்தியுளார்
வாசித்துஉன் புகழ்பரப்பு மகநீயர் துறவுடையார்
தேசத்துக் கென்றும்உள செல்வம் இவர் கோமதியே. 66

ஆராய்ச்சி அனுபூதி எனும்அவற்றுள் அனுபூதிக்கு
ஆராய்ச்சி ஏதுஅன்பர் அனுபூதி யில்லானும்
ஆராய்ச்சி செய்தால் உன்அருளின்ஒரு பான்மையவன்
ஆராய்ச்சி கண்ணுக்கும் அருவிருந்தாம் கோமதியே. 67

சதுமறைஆ கமந்தெளிந்து சைவநெறி கடைப்பிடித்து
மதி அரவ வேணியரன் வாமத்தாய் உன்தாளை
எதுவரினும் மறவாமல் இனிவரும் எம் குலத்தோடும்
மதிவலி பெற்றுஉய்ந்தேத்த வரந்தருவாய் கோமதியே. 68

வேற்றுமத தூடணையை விடுவதன்றி அம்மதத்தைப்
போற்றுவதென் சைவன்அவன் புகழ்ந்துரைக்க வேண்டுவது உன்
நீற்றுநெறி ஒன்றேயந் நெறிக்கற்பைத் துறந்தபினும்
ஏற்றம் அவன் எய்துதற்கோர் ஏது உண்டோ கோமதியே. 69

ஏறுமிடம் இறங்குமிடம் எவ்வெவர்க்கும் வெவ்வேறாம்
ஏறினவர் இறங்களவும் எவ்வூர்திப் பயணத்தும்
மாறிலராய் மனமொத்து வதிந்திடுதல் போன்றதுவே
கூறுஉலகில் எவ்வுயிரின் குடியிருப்பும் கோமதியே. 70

சைவத்திற் சிலர்பிறந்துஅந்தச் சமயநிந்தை புகல்வதுபோல்
பொய்வைத்த சமயிகளும் புகல்ஆரச் சிலர்உன்றன்
மெய்வைத்த அருட்குஅயலாய் வெங்கலிவாய்ப் பட்டுஅந்தச்
சைவத்தைப் பழித்துஉயிரின் சார்பு இழந்தார் கோமதியே. 71

இத்தேசம் எமக்கேயாம் இதிற்பிறந்த ஏதுவொன்றால்
இத்தாலம் அப்படியே எவ்வுயிர்க்கும் உரித்தாகும்
அத்தால் எவ்வுயிர்க்கும் இந்தஅவனியிடத்து உரிமையினை
எத்தாலும் பறிப்பதற்கிங்கு யாம்ஆரே கோமதியே. 72

பன்றிமுதல் எவ்வுயிர்க்கும் பரமசிவன் பரமபிதா
பன்றிமுதல் எவ்வுயிரும் பார்க்கிலுடன் பிறந்தனவாம்
பன்றிமுதல் எவ்வுயிர்க்கும் பார்முழுக்கப் பொதுஉடைமை
பன்றிமுதல் எவ்வுயிர்க்கும் பரிவுஉடையாய் கோமதியே. 73

பெற்றவனை அறியாத பிள்ளைக்குப் பிறப்புரிமை
சற்றுமிலை பெற்றவளால் சார்வதிலை திரிபுரத்தைச்
செற்றவனே பெற்றவன்இச் சீவரை அஃதுணர்வார்க்கே
பொற்றவுல கெல்லாமாம் பொதுஉடைமை கோமதியே. 74

உன்னருளைப் போற்றா ருற்றுலகை யனுபவித்தல்
மன்னுவிலங்கு அனுபவித்தல் மானும் உளத்து அவ்வருளை
உன்னுபவர்க் கென்றேஇவ் வுலகு உன்னால் றரப்பட்ட
அன்னதைஈங் கறிவதன்றோ அறிவாகும் கோமதியே. 75

பொருளியலை அறிந்துள்ளம் புனிதமுற்றுஉன் அருள்பெறவே
பொருளுடையர் இல்லார்க்குப் பொருளீக அஃதன்றி
அருளுளமே கொண்டுஅவரை ஆதரிக்கத் தாம்உணராப்
பொருளுடையார் செருக்குவதிற் பொருளுண்டோ கோமதியே. 76

எப்பொருளுக்கு உள்ளேயும் ஈசுவரனைக் காணென்பர்
அப்படியே காண்பானுக்கு அகமுனைத்துத் தோன்றிடுமோ
அப்பொருளும் புலனாமோ அக்காட்சிக்குஆம் பயனைச்
செப்புவரோ உன்னருளில் திளையாதோர் கோமதியே. 77

பொதுவென்றுஞ் சிறப்பென்றும் புகலும் இரண்டொழுக்கமுமே
மதுவொன்றுஉன் மலர்த்தாளை வழிபடுவோர்க்கு அவசியமாம்
அதுவொன்றே இதுஒன்றே அமையுமென ஒழுகிடுவார்
விதியொன்றும் அறியாமல் வீண்போவார் கோமதியே. 78

கடவுளை இம்மனிதன்தான் கற்பனை செய்தான் என்று
மடவர் உரைத்திடுவர் அந்த மனிதன் எவனென வினவில்
தடவுவரால் விடையினைஅச் சார்வாகர் குழாம்பெருகி
யிடவுலகைக் கவர்ந்திட்டால் ஏதம் அன்றோ கோமதியே. 79

யானை கண்ட குருடரென இருப்பனபுன் மதங்களெல்லாம்
யானை கண்ட விழியன்என விலங்குவதுஉன் சைவமொன்றே
யானை கண்ட விழியன்உண்மை எடுத்துரைத்தால் அவனைவைது
யானை கண்ட குருடரெல்லாம் எள்ளாரோ கோமதியே. 80

உவமானப் போலிகளை உரைத்து அழிந்து சைவத்துக்கு
அமவாகுச் சமயிகளை அயலாக்கிக் கெடுக்கின்றார்
சிவஞான போதாதி திராவிடமா பாடியமிங்கு
அவர்ஆயாது இருந்தால் நன்று அறிகுவரோ கோமதியே. 81

பரசமய நிராகரணம் பண்ணாமல் சைவத்தைத்
திறமுறஇங்கு எவர் தெளிவார் சீர்தூக்கு முறையாலே
பரசமய நிராகரிப்பும் பண்ணிடுக பகையால் அச்
சிரமவினை புரிந்தாலே தீதுஎன்னாய் கோமதியே. 82

என்றென்றும் எங்கெங்கும் எனது எந்தச் செய்கையிலும்
நன்றென்றுஉன் நாள் மலர்த்தாள் நான்மறவாது இருந்ததற்கு ஆம்
தொன்று ஒன்று புவிமீதிற் சுபுத்தியொன்று நல்குவையே
குன்று ஒன்று குணமுடையார் குளிர்ந்தேத்தும் கோமதியே. 83

முப்பொருளின் இயல்புஅறிந்து அம்முப்பொருளின் சம்பந்தம்
இப்படியென்று அளவைகளால் இருக்குவழி ஆய்ந்துணர்ந்து
செப்பம் மிகுந்தவரே உன் திருவருளில் தம்மை யிழந்து
ஒப்பரிய கதிசேர்ந்தங்கு ஓய்ந்திருப்பார் கோமதியே. 84

சிலர் அன்பு அறிவு ஆதியவே தெய்வமென்பார் அவைகுணமே
நலமுறும் அக்குணி யெதுவோ நல்லிறையா புல்லுயிரா
உலகவரையே மாற்றி ஒவ்வாத கோளுரைத்தால்
அலகையவர் என்பதில் ஓர் ஐயமுண்டோ கோமதியே. 85

பிரமனெனும் பொருளென்றே பெயர்தானே பலவென்னில்
பரமசிவன் எனும் பெயர்க்குப் பரந்தாமன் பொருளாமோ
சரளமுறு நிகண்டுஅருத்தந் தருகோசம் பயனிலவோ
புரம்எரியச் சிரித்தவனைப் போற்றிமகிழ் கோமதியே. 86

சீராசை வரராசை திகழ்புன்னைக் கூழையெனும்
பேராரிந் நகரத்துஉன் பெருங்கோயில் புகுந்துசுனை
நீராடி நீறணிந்துஉன் சன்னிதியில் நின்றுஅன்பு
பேராமல் வணங்காரும் பிறந்தாரோ கோமதியே.

நரருக்கு நாட்டுக்கு நான்செய்யு நற்பணியே
பரனுக்காம் பணியென்பர் பாரரசின் கொடியேற்றி
வரவேற்றுஇங்கு அரசினரை வழிபடலேன் அவ்வணக்கம்
பரனுக்குஞ் செய்வதன்றோ பகுத்தறிவாங் கோமதியே. 88

பொல்லாரை வெறுத்திடற்க பொல்லாங்கை வெறுத்திடென்றால்
நல்லாரை விரும்பற்க நலத்தினையே விரும்பென்றாம்
நல்லாரைப் பொல்லாரை நலந்தீங்குக்கு அயலென்றால்
நல்லாரை மதியாத நவைவருமே கோமதியே. 89

தனிமனிதன் விடயமென்பர் சமயத்தை அதுசெல்லாது
இனமிலதேல் சிவசமயத் திருக்கோயில் பூசைவிழா
தினவிரதம் ஆசாரந் திருமறை நூல் திரவியங்கள்
இனிவருசந் ததியாதி இருந்திடுமோ கோமதியே. 90

கண்ணாடி யணிந்தாலும் காண்பாரோ அந்தகரே
மண்ணாடும் வாழ்வில்அகமகிழ் மாந்தர்க்கு அருமறைகள்
தண்ஆர் உன் அருட்சிறப்பைத் தகும்ஆற்றால் விரித்தாலும்
உள்நாடி அவர்தெளியாது உழலாரோ கோமதியே. 91

விழிகாணும் பொருள்களெலாம் மேதினியில் அழிவனவே
அழிவுஏயாப் பொருளெவன்கட்கு அகப்பட்டது இன்றுவரை
பழிதீர்உன் திருவடியைப் பார்ப்பதற்குஉன் அருள்ஒன்றே
விழியாகும் என்பதன்றோ மெய்யாகும் கோமதியே. 92

பெற்றவரும் பெறவில்லை பிறந்தவரும் பிறக்கவில்லை
பெற்றவரைப் பெறுவித்தாய் பிறந்தவரைப் பிறப்பித்தாய்
சிற்றுயிர்க்கு இதஞ்செய்யும் திருவிளையாட்டு அற்புதமே
பற்றுஅற உன்பதம் அடியேன்பற்ற அருள் கோமதியே. 93

மண்ணுலகில் பெற்றவரால் மனைவியரால் புத்திரரால்
கண்ணெனுநல் கல்வியினால் கனதனத்தால் பதவியினால்
நண்ணுசுகம் உன்னடிக்கீழ் நண்ணி இறுமாந்தவர்க்குத்
தண்நிலவில் தருவின் நிழல் தருசுகமாம் கோமதியே. 94

நிலையாமை தெரியாதார் நீள்நிலத்தில் எவருமிலர்
அலையாமை உளத்திருத்தி அன்பும் உன்பால் செய்கிலார்
நிலையாமை தனைநினைந்து நெஞ்சம்உன் அடியில்நிலை
குலையாமை கூடும்வகை குறியாரோ கோமதியே. 95

விதிநியமம் எமக்காம் யாம் விளம்புதற்கா இலம்எனநீ
உதவ அதனை மாற்றுசிலர் உலகில் எதற்கு இருக்கின்றார்
அதனைஅவர் இயம்புக உன்அருள் பெற என்றனரேல்அவ்
விதி நியமம் மாற்றம்அவர் வேண்டுவரோ கோமதியே. 96

ஒழுக்கத்துக்கு உறுபயன்இவ் வுலகசுகம் எனில் மிருகம்
ஒழுக்கமின்றி நுகர்ந்திலதோ உலகசுகம் நீவகுத்த
ஒழுக்கத்துக்கு உறுபயனாம் உயர்ந்த உலகுஅதனை மறுத்து
ஒழுக்கத்தைப் புகழ்பவர்பால் ஒழுக்கம் உண்டோ கோமதியே. 97

பொருட்செறிவுஞ் சொற்சுவையும் பொருந்தாமல் இருந்தாலும்
மருட்செறிவை நீக்கி இன்பம் மன்னுயிர்கட்கு ஈயும் உனது
அருட்செறிவை ஏத்திலவோ அடியேன்செய் பாக்களெல்லாம்
இருட்செறிவோடு இயன்மணமார் எழிற்கூத்தற் கோமதியே. 98

தொழவேண்டும் உனையென்றும் தூமலர் தூஉய் பாடிஉன்முன்
அழவேண்டும் உன்னடியில் அடியற்ற மரமேபோல்
விழ வேண்டும் இவை செய்துஉன் விளங்குஅருளில் திளைத்துஆடி
எழ வேண்டும் என்பதுவே எனக்குஆசை கோமதியே. 99

தனம் உயரக் கலைவளரச் சதாசாரம் மிகநட்புக்
கனியமழை பொழிவளங் கவிய சிவ சற்சமயம்
நனிபரவச் சீராசை நலம் பெருகச் சங்கரனார்க்கு
அனனிய சிற்சத்திநீ அருள்புரிக கோமதியே. 100

திருச்சிற்றம்பலம்

கோமதி சதரத்ந மாலை முற்றிற்று

ஸ்ரீமத் சிவஞான சுவாமிகள் திருவடி வாழ்க.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ நால்வர்பொற்றாள் எம்முயிர்த்துணையே

## முன்னுரை

ஞானத்தின் திருவுருவை நான்மறையின் தனித்துணையை
வானத்தின் மிசையன்றி மண்ணில் வளர்மதிக் கொழுந்தைத்
தேனக் கமலர்க் கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்கும்
கானத்தின் எழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள்

- ஸ்ரீ தெய்வச்சேக்கிழார் சுவாமிகள்

**ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள் திருவடி போற்றி**
**ஸ்ரீ வேலப்ப தேசிக சுவாமிகள் மெல்லடி போற்றி**
**ஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள் மலரடி போற்றி**

சமயக்குரவர்களின் நெறி நின்று அவர்களின் அடிச்சுவட்டில் சைவப்பயணம் செய்த ஈர அன்பினர், சைவமும் தமிழும் எனது இரு கண்கள் என்று வாழ்ந்து காட்டிய யாழ்ப்பாணம் நல்லூர் ஆறுமுக நாவலர் அவர்களின் வாழையடி வாழை என வளர்ந்து வந்த திருக்கூட்ட ஞான பரம்பரையினர், சைவமகத்துவம் சிவபரத்துவம் இவற்றிற்காவே வாழ்ந்த சிவத்தொண்டர்கள்.

பெரியபுராணத்தைப் பட்டி தொட்டிகள் தோறும் பரப்பிய பண்பாளர்கள், சிவஞானயோகிகள் எனும் சிவத்தை சிவச்சிந்தனையாளர்கள். தரணி எங்கும் தழைக்கச் செய்த மேன்மை மெய்கண்ட சாத்திரங்களை மெய்ப்பட உணர்த்திய துறைசையாதீன வித்துவான்களாக பொருந்தியோர்கள். திரிகரணத் தூய்மையானவர்கள். இருபதாம் பணிசெய்த நூற்றாண்டில் வாழ்ந்த ஈடு இணையில்லாச் சைவச்சான்றோர்கள். தனது சாத்திர போதனையில் தமிழகமெங்கும்





எண்ணற்ற மாணவர்களைக் கொண்ட மாண்பினையுடையவர்கள். பணியே அரன் பணி என்று வாழ்ந்த ஆசிரியர் பேட்டை ஆ. ஈசுவரமூர்த்திப்பிள்ளையவர்களும், சீராசைநகர் ஆதிசைவ வித்துவான் ச.இரத்னவேலன் அவர்களும் இப்பெரியாரின் தொண்டே தோன்றலுக்கு அணுக்கமானவர்கள். "சைவத் தொண்டு" என்று அதி உன்னதமான தருணத்தில் பழநி ஈசானசிவாசாரிய சுவாமிகள் பாராட்டி மகிழ்கின்றார்கள்.

கோமதிசதரத்ன மாலை என்னும் இந்நூலை சங்கரன்கோவில் வாழ் சைவ அன்பர்கள் பல்வேறு நிகழ்வுகளில் வெளியிட்டு கோமதியம்பிகையின் திருவருளுக்கு பாத்திரமானார்கள் அவர்களுடன், கரிவலம்வந்தநல்லூர் நம்பியாரூரர் அடியார்கள் திருக்கூட்டம் வெளியீடு செய்யும் இந்நூலும் அணிக்கு அணி செய்து மகிழ்கின்றது.

திக்கெல்லாம் புகழுறும் கோமதியம்பிகையின் பரத்துவத்தை பறைசாற்றும் இலக்கியங்களில் முதன்மை வகிப்பது கோமதி சதரத்ன மாலை. மாலையை அழகிய வண்ண வண்ண கருத்துச்செறிவுடைய பூக்கள் கொண்டு தொடுத்தருளியவர் ஆ.ஈசுவரமூர்த்திப்பிள்ளையவர்கள். அப்பாமாலையின் தனித்துவம் எல்லோருக்கும் விளங்கும் படி எடுத்துச்செய்தருளியவர் ச.இரத்னவேலன் அவர்கள். முன்னவருக்கு பின்னவர் சீடராவர். பின்னவருக்கு முன்னவர் ஞானாசிரியர் ஆவார். குருவும் சீடனும் இணைந்து பரம நாயகி கோமதியம்பிகைக்கு அணிவித்த மாலையை எல்லா உயிர்களும் அணிவித்து மகிழவேண்டும் என்ற பெரு விருப்பம் கொண்ட கரிவலம்வந்தநல்லூர் நம்பியாரூரர் அடியார்கள் திருக்கூட்டம் இந்நூலை புதுக்கி மறுபதிப்பு செய்துள்ளது.

மெய்கண்ட சாத்திரம் பயில்பவர்கள், பயிற்றுவித்துக் கொண்டு இருப்பவர்கள், பயிலவேண்டும் என ஆர்வம் கொண்டோர்கள் அனைவரும் கட்டாயம் பாராயணம் செய்ய வேண்டும் என்பது உள்ளார்ந்து படிப்போர்க்கு நன்கு துணியப் படக்கூடிய விஷேசக்குறிப்பாகும்.

முடிந்தளவு, இப்பணியில் சொற்பொருள் குற்றம் ஏற்படாமல் இந்நூலை "பாமரர் முதல் பண்டிதர்" வரை படித்துப்பாராயணம் செய்யுமாறு புதுக்கியுள்ளது . கோமதி சதரத்ன மாலை எனும் மூலம் நூலினை வெளியிட கூட்டுவித்த குருவருள் திருவருளை நினைந்து மகிழ்கின்றது.

அறுபது ஆண்டுகள் நிறைந்த இந்நூலிற்கு அருள்வாழ்த்துரை வழங்கியருளிய துறைசையாதீன கர்த்தா ஸ்ரீ அம்பலவாண தேசிக பரமாசாரிய சுவாமிகள் திருவடிகளை மனம், மொழி, மெய்களால் வணங்கி மகிழ்கின்றோம் .

குறுகிய காலத்தில் நிறைவான பணியை சிறப்புடன் மின்னுருவாக்கம் செய்த சீராசைச்சிறுவன் (ச.விக்னேஷ்) அவர்கள் எல்லா நலனும் பெற அம்மையப்பனை பிரார்த்தித்து மகிழ்கின்றோம்.

"பிழை பொறுத்தல் சான்றோர் கடன்"

குரு சேவையில்...
பெரி. பொன்கருசிவலிங்கம்
நம்பியாரூரர்அடியார்கள் திருக்கூட்டம்
கரிவலம்வந்தநல்லூர்



உ

ஸ்ரீ மெய்கண்ட தேசிகன் திருவடி வாழ்க

# கோமதி சதரத்ன மாலை

## காப்பு

சங்கரன் கோயிலமர் சங்கர லிங்கனார்
பங்கிலுறு கோமதித்தாய் பாதமலர் பொங்குதமிழ்
யாப்பாலிங் கேத்துவேன் யானைமுகத் தெய்வமே
காப்பாக வுன்பொற் கழல்.

## நூல்

1. பாரதமே திருநாடு பரசிவமே பரமபதி
ஆரணமே ஆகமமே யருடருநூல் அதிற்சுரக்கும்
சாரமதே சைவமெனும் சற்சமயம் எனநாயேன்
தேரவருள் செய்தனையே சீராசைக் கோமதியே

2. கதிரோனின் பதிநேர்வன் கதிர்நேர்வை நீயன்றோ
மதிவாணர் போல்வருனை மாயையென்பர் அதனாலுன்
பதியாரைச் சடமெனவும் பகராமல் பகர்வாராய்
அதிசோக முறுவரந்தோ வருள்ஞானக் கோமதியே

3. ஊனுடலே உயிராகும் உலகேவீ டாகுமெனும்
ஈனமதிக் கிரையாய்நான் இறவாமுன் நின்தாளில்
ஆனறவென் தலைசார்த்தி யின்பாரு நாளுளதோ
கானமரு மென்கூந்தல் கலியாணி கோமதியே

4. ஆங்கிலமே திராவிடமே ஆரியமே யாம்பலவும்
பாங்குபெறக் கற்றாலும் பயனென்கொல் சுமையன்றே
தேங்கமழுன் சீர்பாதம் சிந்திக்கக் கற்பதொன்றே
ஓங்குநலம் என்றுரைத்தாய் உலகளிக்கும் கோமதியே

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
ஸ்ரீநால்வர்பொற்றாள் எம்முயிர்த்துணையே

# சௌபாக்கியங்களைத்தரும் சங்கரன்

## 1. முதல் திருமுறை

தாயு நீயே தந்தைநீயே **சங்கரனே** அடியேன்
ஆயு நின்பால் அன்பு செய்வான் ஆதரிக்கின்றது உள்ளம்
ஆய மாய காயந்தன்னுள் ஐவர் நின்று ஒன்றல் ஒட்டார்
மாயமே என்று அஞ்சுகின்றேன் வலிவல மேயவனே.

## 2. இரண்டாம் திருமுறை

எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன்னடியார்க்கு
இங்கே என்று அருள்புரியும் எம்பெருமான் எருதேறிக்
கொங்கேயும் மலர்ச் சோலைக் குளிர்பிரம புரத்துறையும்
சங்கேயொத்து ஒளிர்மேனிச் **சங்கரன்** தன் தன்மைகளே.

## 3. மூன்றாம் திருமுறை

இலங்கை மன்னன் எடுத்த அடுக்கன்மேல்
தலங்கொள் கால்விரல் **சங்கரன்** ஊன்றலும்
மலங்கி வாய்மொழி செய்தவன் உய்வகை
நலங்கொள் நாமம் நமச்சி வாயவே

## 4. நான்காம் திருமுறை

சலமிலன் **சங்கரன்** சார்ந்த வர்க்கலால்
நலமிலன் நாள்தொறும் நல்கு வான்நலன்
குலமில ராகிலும் குலத்திற்கு ஏற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே





## 5. ஐந்தாம் திருமுறை

போது தாதொடு கொண்டு புனைந்துடன்
தாத விழ்சடைச் **சங்கரன்** பாதத்துள்
வாதை தீர்க்கஎன்று ஏத்திப் பராய்த்துறைச்
சோதி யானைத் தொழுது எழுந்து உய்ம்மினே.

## 6. ஆறாம் திருமுறை

நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு, மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந் தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச்
**சங்கரா** சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடைஎம் ஆதீ என்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே.

## 7. ஏழாம் திருமுறை

மின்னனை யாள்திரு மேனி விளங்கவோர்
தன்னமர் பாகம தாகிய **சங்கரன்**
முன்நினை யார்புரம் மூன்றெரி ஊட்டிய
பொன்னனை யாள்உறை பூவணம் ஈதோ.

## 8. எட்டாம் திருமுறை

தந்தது உன் தன்னைக் கொண்டது என் தன்னைச்
**சங்கரா** ஆர்கொலோ சதுரர்
அந்தமொன்று இல்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றது ஒன்று என்பால்
சிந்தையே கோயில் கொண்ட எம்பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே ஈசா உடல்இடங் கொண்டாய்
யான்இதற்கு இலன்ஓர் கைம் மாறே.

## 9. ஒன்பதாம் திருமுறை

தனதன்நற் தோழா! **சங்கரா!** சூல
பாணியே! தாணுவே! சிவனே!
கனக நல்தூணே! கற்பகக் கொழுந்தே!
கண்கள் மூன்றுடையதோர் கரும்பே!
அனகனே! குமரவிநாயக சனக!
அம்பலத்து அமர சேகரனே!
உனகழல் இணையென் நெஞ்சினுள் இனிதாத்
தொண்டனேன் நுகருமா நுகரே.

## 10. பத்தாம் திருமுறை

அளவில் இளமையும் அந்தமும் ஈறும்
அளவியல் காலமும் நாலும் உணரில்
தளர்விலன் **சங்கரன்** தன்னடி யார்சொல்
அளவில் பெருமை அரிஅயற்கு ஆமே.

## 11. பதினொராம் திருமுறை

நடமாடும் **சங்கரன்**தாள் நான்முகனும் காணான்
படமாடும் பாம்பணையான் காணான் - விடம்மேவும்
காரேறு கண்டன் கயிலாயன் தன் உருவை
யாரே அறிவார் இசைந்து.

## 12. பனிரெண்டாம் திருமுறை

எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும்
மன்னியசீர்ச் **சங்கரன்**தாள் மறவாமை பொருள் என்றே
துன்னிய வேடந்தன்னைத் துறவாதே தூயசிவம்
தன்னைமிகும் அன்பினால் மறவாமை தலை நிற்பார்.

**திருச்சிற்றம்பலம்**

உ

# சங்கரநயினார் கோவில்
# கோமதியம்பாள் அந்தாதி

## காப்பு

### விநாயகர் வணக்க ஸ்துதி

மாமதியின் சடைநந்தா தணிபரன் வாமமுறும்
**கோமதியின்** திருவந்தா திநூறையும் கோதிலவாய்த்
தாமதியின் றிவருந்தா துரைசெயத் தாயகமாய்க்
காமதியின் கணிருந்து ஆதரிக்கும் கயமுகனே!

### சரஸ்வதி ஸ்துதி

செங்கையின் மழுமான் ஏந்தும்
 சிவபிரான் மகிழ்ச்சி யோங்கச்
சங்கர நயினார் கோவில்
 தனில்மணந் தெமைப்போல் வார்க்கு
மங்களம் பெருகி வாழ
 வரம்கொடுப் பவளைப் பாடப்
பங்கமில் குணத்து ஞானப்
 பனுவலாள் கழல்காப் பாமே!

### உமையவள் ஸ்துதி

தவமே யுருவாய்ச் சுயம்பாகித்
 தனியே முளைத்துக் கயிலையினில்
சிவனாம் தருவைப் புணர்ந்துவெகு
 சீவக் கனிகள் விரைந்தளித்து
நவமாய்ப் பசந்து மறைமணக்கும்
 நறுமென் கொடியாம் திருமருந்தைச்
சிவமாய் நினைந்து பலபிணியும்
 தீர அகத்துள் இருத்துதுமே!





## அவையடக்கம்

### வெண்பா

சித்தமகிழ்ந் தெற்கருளைச் செய்கோ மதியுமைமேல்
பத்தியினால் அந்தாதி பாடினேன் - முத்தமிழீர்
குற்றமென எள்ளாமல் கொள்வீர்நற் பூவொடுநார்
உற்றதனைப் பார்கொள்வ தோர்ந்து!

## நூல்

### கலித்துறையந்தாதி

செல்வி கடாட்சம் உண்டாயப் பொருள் சேரச்
 சிறந்தபெரும்
கல்விமெய் ஞானம் கருத்ததிலுண் டாகக்
 கதிபொருந்த
நல்வித மாய்த்துதிப் பாய்மன மேஎழில்
 ஆடுமலைச்
செல்வி எனும்பெயர்க் **கோமதி** யாள்தன்
 திருவடியே!
- 1

திருவே திருவில் சிறந்த ஒளியாகித்
 திகழ்ந்ததிரு
உருவே அகிலத்து உயிர்தோறும் ஒன்றி
 உணர்வளிக்கும்
குருவே குணம்குடி யாய்க்கொண்ட ஞானக்
 கொழுஞ்சுடரே
அருவே எனைவந்து காத்தருள் **கோமதி**
 **யம்பிகையே**! - 2

கைசெழுந் தாமரை கால்செழுந் தாமரை
 காமுறுங்கண்
மெய்கருந் தாமரை போல்விளங் கானந்தம்
 மெய்தவம்சேர்
ஐவடி வாம்பரை **கோமதி** யாள்தன்
 அடிக்கமலத்து
எய்திடும் மாதவப் பத்தர்கட் காய்வரும் - 3
 இன்பங்களே!

பங்கயன் போற்றப் புரந்தர னேமுதல்
　பண்ணவர்தம்
செங்கரம் கூப்பி வணங்கிட ஞானச்
　சிவபரையென்
இங்கித வீணை முனிவோர் குழுக்கொண்டு
　இறைஞ்சநெடும்
சங்கம் பெருகிச் சிறப்புறும் **கோமதி**
　சந்நிதியே! - 4

சன்னிதி போற்றித் திருத்தளி சூழ்வந்து
　சாநூவியாம்
நன்னதி ஏற்ற சடையார்க்கு ஒருதனி
　நாயகியார்
தன்னுயர் நாமம் பெறுமா வுடைப்பொய்கை
　தன்னருகில்
துன்னிடு வோரைத் தொடரா மரணமும்
　தோற்றமுமே! - 5

தோற்றுவிப் பாள்அன்னை யாகிப்பின் காத்தும்
　தொடர்வினையால்
மாற்றுவிப் பாள்நெடும் வையமும் வானமும்
　மாதிறல்வெள்
ஏற்றுகைப் பான்இடப் பாகத்தில் மேவி
　இலங்குநெடும்
கூற்றுறழ் மாக்கள் திருமா தவச்செழும்
　**கோமதியே!** - 6

மதியிருந் தாலும் புகழ்இருந் தாலும்
　அதியநெடும்
பதியிருந் தாலும் கிளையிருந் தாலும்
　பகரும்நவ
நிதியிருந் தாலும்நம் **கோமதி** பாதத்தை
　நீத்தவர்கள்
கதியிருந் தாள்வதென் நெஞ்சே அமரரும்
　கண்டிலரே! - 7

4. பண்ணவர் - அமரர், வீணைமுனி : நாரதர். 5. சானவி - கங்கை.





கண்டேன் கருணை தரும்கோ மதியினைக்
　கைதொழுது
விண்டேன் அவள்புகழ் யாவையும் வாய்கொண்டு
　வேண்டியருள்
கொண்டேன் பரசம யம்குறு கேன்கொடுங்
　கூற்றுமுட்கி
அண்டேன் எனச்சொல்ல மேன்மைபெற் றேன்எனக்
　கார் நிகரே! - 8

நிகரள வாதி முடிவின்றி யாவும்
　நிரந்தரமாய்ச்
சகமுழு தாண்டருள் ஆனந்த மாம்தனிக்
　**கோமதியை**
அகமிசை வைத்தடி போற்றா திருந்த
　அறிவிலரும்
சுகமுடன் வாழ்தல்முன் னாள்தவப் பேறெனச்
　சொல்லுவரே! - 9

சொல்லுவன் **கோமதி மந்திரம்** நாள்தொறும்
　சொல்லியதால்
வெல்லுவன் வேறு சமயாதி நூல்சொல்லும்
　வித்தகரைக்
கல்லுவன் காமம் முதலாறும் வேரறக்
　காய்ந்துசினம்
கொல்லுவன் தாரித் திரமுத லான
　கொடுவினையே! - 10

வினையால் வருந்தினும் வாழினும் **கோமதி**
　**மெய்ப்பெயரை**
நினையார் பணிவிடை தானும்செய் யார்அடி
　நீள்முடிமேல்
புனையார் அரும்புகழ் நாக்கொண்டு நாளும்
　புகழ்ந்துசொல்லார்
பனைவான் இடிவிழப் பட்டது போல்படு
　பாதகரே! - 11

10. தாரித்திரம் - தரித்திரம்

பாடவென் றால்கல்வி ஞானம் இலேன்செழும்
பாதம்முடி
சூடவென் றால்இறை பக்தியி லேன்உயர்
தோமில்குணம்
நாடவென் றால்மதி தானுமி லேன்இவை
நாள்தொறும்கை
கூடநின்று ஆரருள் நீயருள் **கோமதி**
நாயகியே! - 12

நாயகி யாம்பரம் உன்னையல் லாலினும்
நாடியலை
பேயனை யார்சக வாசமில் லாதுஎனை
பேணியருள்
வாயனை யேபுவி யோர்பதி னாலையும்
வாரியுண்ட
வாயனைச் சோதரன் என்றுகொள் **கோமதி**
அம்பிகையே! - 13

அம்புயப் போதுறழ் பாதத்தை நாளும்
அடைக்கலமாய்
நம்பிய ஏழையைக் கைவிடில் யாருனை
நம்புவர்கள்
வெம்பிழை யான்புரிந் தாலும் பொறுத்துயர்
வேட்கையுடன்
கம்பிதம் மாற்றி அருள்**கோ மதி**எனும்
கற்பகமே! - 14

கற்பக வேல்விடு சேந்தனைத் தேவ
கணங்கள்நிறை
கற்பக நேர்ஜங் கரநாத னைத்தரு
காமர்செழுங்
கற்பக மேவிய **கோமதி தாளைக்**
கருத்தினில்வைத்து
அற்பகல் ஏற்றத் துணியார் தவமவம்
ஆய்விடுமே! - 15

15. (i) கற்பக - கல் + பக - மலை பிளக்க, (ii) கற்பகம் நேர் - பனைமரம் போன்றகரம், (iii) கற்பகதரு - நினைத்ததை தரும் விருட்சம் (iv) அற்பகல் - அல்லும் பகலும்.





ஆய்ந்திடில் பல்பிணி வஞ்சனை சூனியம்
ஆடிமிகத்
தேய்ந்திடச் செய்யும் சிறுபே யணுகலித்
தீமையெல்லாம்
வாய்ந்திட **கோமதி நாமம்** அல்லாமலென்
மடமனமே
மாய்ந்திடச் செய்யும் மருந்தே யிலையென
வந்திப்பையே! - 16

வந்தனை செய்வன் உனதடித் தாமரை
வாழ்த்திநிதம்
சிந்தனை செய்வன் உனதபி தானநற்
சீரருள்செய்
கந்தனை வந்த வினைதீர்த் தருளும்
கயமுகனை
மைந்தன் எனத்தரு **கோமதி** யாகிய
மாமணியே! - 17

மணியே மணியில் திகழ்ஒளி யேதனி
வானவரும்
பணியே புரியப் பணித்தருள் ஞானப்
பரஞ்சுடரே
அணியே அகில உயிர்கள்எல் லாம்பெற
ஆங்கவர்தம்
பிணியே தவிர்த்திடும் **கோமதி** யேவந்து
பேணிக்கொளே! - 18

பேணுவ ளோசெய் பிழைநினைந் தேஎனைப்
பேணமனம்
கோணுவ ளோஎளி யேன்செயும் பாடலைக்
கொண்டுகழல்
பூணுவ ளோஎன்ன தான்செய்வா ளோஎழில்
பூத்தமறை
வாணர்கள் போற்றிடும் **கோமதி** யாம்நம்
மலைமகளே! - 19

16. ஆடி - தரித்திரம்.

மலைமகள், அம்பிகை, **கோமதி, சத்தி,**
மனோன்மணி,நின்
மலை,மக ளாக எழில்காஞ் சனையிடம்
வந்துதித்து
நிலமகள் வாழ்த்தப் புவியாண்டு சுந்தர
நின்மலனைத்
தலைமக னாகக் கொண்டாள் துணையாகும்
தமியனுக்கே! - 20

தமிழ்முனிக் கன்றுன் மகன்உப தேசித்த
தன்மையைப்போல்
அமிழ்தினும் இன்சொல் பசுங்**கோ மதி**என்
னரும்பிறவி
துமியும் படிக்குன் மனுஉப தேசித்துத்
தொண்டுகொண்டால்
இமிழ்கடல் ஞாலத்தில் உண்டோ வசையிங்கு
இயம்புவையே! - 21

வைகலும் உன்திருத் தாள்போற்றும் ஏழை
மனம்வருந்தச்
செய்திடில் **கோமதி சீர்த்தி** என்னாம்உனைச்
சிந்தைசெய்யும்
வையகம் என்சொலும் நீயறி யாய்சொல்
மகிழ்ந்தருளைச்
செய்திடில் அன்றோ பரமுண்டு எனப்புவி
சிந்திக்குமே! - 22

சிந்திக்க உள்ளத்து அமுதூறும் ஞானச்
செழுங்கரும்பை
வந்திக்க வாழ்வு தரும்**கோ மதி**யை
மலைமகளை
நிந்தித்த தக்கன் மகம்போன போக்கை
நினைந்துருகிப்
புந்திக்குள் வைத்திடின் நெஞ்சே மிகுந்த
புகழ்உனக்கே - 23

21. மனு - மந்திரம், தர்மசாத்திரம்.





உனக்கிணை யாய்ஒரு தெய்வமுண் டாமென்று
உரைத்திடல்பொன்
தனக்கிணை யாய்கருந் தாதினைச் சாற்றல்
தனைநிகர்க்கும்
நினைக்கரி தாகிய **கோமதி** யேயுயர்
நின்மலமாம்
புனக்கிளி யேஎனை ஆட்கொண்ட ஞானப்
பொருட்பயனே! - 24

பொருள்மனை வாழ்வு புவிஇவை யாவையும்
பொன்றச்செயும்
மருள்தந்து எனைத்துயர் செய்யும் என்றேஉனை
வந்தடைந்தேன்
தெருள்தந்து உனதடி யாரொடு கூடிச்
சிறந்திருக்க
**அருள்சங் கரநயி னார்கோவில் வாழ்சிவ**
**அம்பிகையே!** - 25

அம்பர வம்புனை வேணியன் பாகத்து
அமர்ந்தறவோர்
உம்பர்கள் போற்றிட வான்மீகி மண்ணெனும்
ஓர்மருந்தால்
வெம்பவ ரும்பிணி யாவையும் தீர்த்து
விரைந்தருளை
நம்படி யார்க்குயர் **கோமதி** ஈவது
நற்புகழே! - 26

நற்றவத் தோர்கள் புகழாடி யாடியின்
நாகவனத்து
உற்றிடும் ஈச்சுரன் மாணுருக் காணுதற்கு
ஓங்குதவம்
**பற்றறக் கோமதி** செய்வதைக் கோவிறை
பார்த்தடைந்தேன்
இற்றைக்கோ ராயிரம் கண்பெற்ற பேறென்று
இறைஞ்சுவனே! - 27

27. ஆடியாடி - ஆடித்திங்கள் உத்திராடம் நாள்.

என்றும் உனதடித் தாமரைப் போதினை
ஏத்தும்மெனக்கு
இன்றள வும்தனி நீயரு ளாய்எனில்
இங்கருளார்
என்றுனக் காங்கு தருவார் எனுமவர்க்கு
என்சொல்லுவேன்
கொன்றை மலர்த்தொடைக் **கோமதி** யேகுல
தற்பரியே! - 28

பரியாள் எனத்திரு மால்அவ தாரம்பண்
ணிக்கலியின்
வரைமா தெனும்பெயர்க் **கோமதி** யேதனை
வாழ்த்துபவர்
பிரியா வருளும் பெருவாழ்வும் பெற்றிடப்
பேணுவதில்
சரியாய் உனக்கொரு தெய்வ முண்டோயிச்
சகமிசையே - 29

சகத்துயிர் யாவையும் வாய்ப்பெயும் ஏமன்கை
தப்புவித்து
மகத்தனை பாலருந் தாதெனைக் காத்தருள்
வாய்இமய
நகத்திறை யீன்றருள் **கோமதி** யேயடி
நம்பினவர்
அகத்துறை ஞானச் செழுஞ்சுட ரேஎழில்
அம்பிகையே! - 30

அம்புயம் போலும் கழலாளைக் **கோமதி**
ஆனவளைப்
பைம்புயல் போலும் நிறத்தாளைத் தேவர்கள்
பாக்கிமாய்
அம்புவி மீதில் அவதரித் தாளைநம்
ஆரணியைச்
செம்பவ ளத்திரு வாயாளைப் போற்றிடில்
தேசுறுமே! - 31

30. மகத்தன் - விருத்தன். மகத்தனைபால் - விருத்தனாய் நோயுற்று சாவுப்படுக்கையில் பால் ஊற்றும் நிகழ்வு.





**(வேறு - அறுசீர் அந்தாதி)**

தேசில் குணத்தில் அருந்தவத்தில்
திருவில் உருவில் திகழ்மதியில்
காசில் அறத்தில் கருணையினில்
களிப்பில் செழிப்பில் பெறும்பேற்றில்
பேசில் எவர்க்கும் சிறந்தவளைப்
பிணை**நேர் விழிக்கோ மதித்தாயைப்**
ஆசில் பசிய நிறத்தவளை
பகர்வார் தனையார் நிகர்வாரே! - 32

நிகரில் இரண்டு படிவரியால்
நினைக்கும் எண்ணான்கு அறம்வளர்த்த
பகரில் **எழில்கோ மதியே**நின்
புகழ்யான் உரைத்தல் எளியன்சொல்
சுகரில் சிறந்த முனிவர்களும்
சொலற்கிங் கறியார் எனில்சிறந்த
**தகரில் எழுந்து வரும்குமரன்**
**தாயே** எனையாட் கொண்டவளே! - 33

கொண்டல் தவழும் இமயமலை
**கோமான் தரும்கோ மதியே**நின்
மண்டு கருணைத் திருமுகமும்
மலர்போல் வாயும் கருங்கண்ணும்
அண்டும் அடியார்க் கபயமருள்
அழகார் கரமும் திருக்கழலும்
கண்ட பொழுதில் கலிதவிர்ந்து
காணாது ஒழிந்து ஓடியதே! - 34

வீடா வீட்டின் சுகமதனை
விரும்பும் அடியார் தமக்குமனம்
கோடாது அளிக்கும் தவமேஎன்
குறைதீர்த் தருளும் குணமுளஎம்
பீடார் அமுதம் பொறைகுணத்தின்
பேறே உனையென் பிறப்பறுக்கப்
பாடா திருந்த பிழைதவிர்த்துப்
பரிந்தாள் **விமலக் கோமதியே!** - 35

33. தகர் - செம்மறிக்கடா.(யான் உன்புகழை உரைப்பது ஏழமைச் சொல்லாகும்).

மதியில் குதலை மொழிச்சிறுவர்
வைத மொழிகேட் டனைவெறுத்துச்
சதிசெய் துயிரைக் கவரநினைந்
திடில்யார் தஞ்சம் தாளாமல்
எதிர்வந் தடியேன் இழைத்தபிழை
ஏதென் றாலும் மனம்சகித்துத்
ததிகண் டருள்வாய் நீகறுத்தால்
தமியேன் பிழையேன் **கோமதியே!** - 36

மதியம் அணிந்த சிவபெருமான்
வாமத் தமர்ந்து அனைத்துயிரும்
**பதியும் நிதியும் பெறவருள்தான்**
**பாலித் திடும்கோ மதியே**என்
இதயம் இருக்கும் திரிபுரைஎன்று
இறைஞ்சி இறைஞ்சி அனுதினமும்
துதிசெய் தடியேன் தொழும்படிநல்
சுகம்போல் வருவாய் எந்தாயே! - 37

எந்தப் பிறப்பில் பிறந்திடினும்
எங்கே சுழன்று திரிந்திடினும்
கந்தப் பதும மலர்நிகருன்
கழலைப் பணியக் கருத்தளித்தென்
சிந்தைப் பதியில் இருந்துமிகும்
தீய வினையால் சிமிழ்ப்புண்ட
பந்தக் கயிற்றை அறுத்தெனையும்
பாது காப்பாய் **கோமதியே!** - 38

ஏதம் அகலத் திருக்காழி
எம்மான் தனக்குஇன் னருள்சுரந்து
போத முடன்நன் முலைப்பாலும்
பொருந்தக் கொடுத்த படிஎனக்கு
**கோதி லாத பெரும்குணக்கோ**
**மதிநீ** கொடுத்துன் செங்கமலப்
பாதத் தெனைவைத் தருள்புரிவாய்
பரையே இமயப் பசுங்கொடியே! - 39

36. ததி - சாத்வீகம்.
37. மதி - சந்திரன், மதியம் - அழகிய பிறைச்சந்திரன், வாமம் - இடப்பாகம்.
38. சிமிழ்ப்பு - பந்தம்.





கொடிதாம் இயமன் நடுவிருளில்
கொண்மூ வெழுந்து வரல்போலிப்
படிமேல் அதிர்ந்திங்கு எனைஉறுக்கி
பயமேற் கொளவந் தடுத்திடினும்
**துடிநேர் இடைசேர் கோமதிநின்**
துவர்வாய் திறந்து அருள்வரமும்
வடியும் கருணைத் திருவிழியும்
மறவேன் உலகில் பிறவேனே! - 40

### வேறு - கலித்துறையந்தாதி

பிறக்கும் பொழுதெவர் கூடவந் தார்இனிப்
பின்புயிர்விட்டு
இறக்கும் போதெவர் தான்வரு வார்இசை
ஏழைநெஞ்சே
பறக்கும் பறவை எனச்சுழ லாமல்வெம்
**பாவம் எலாம்**
**துறக்கும் படிதுணை கோமதி** தாள்எனச்
சொல்லுவையே! - 41

### வேறு - அறுசீர் அந்தாதி

வையம் தனில்எம் மனுடருக்கும்
வனிதை பொருள்மண் இவைநசையால்
நையும் துயரும் பெரும்பகையும்
நரகில் இருந்தும் கொடும்பவமும்
**தெய்வம் பலவந் தடிபரவத்**
**திகழ்கோ மதியின்** கழல்மறக்கும்
மைய லுடன்வந் திடும்அறிவாய்
மனமே அதினால் எழும்பிறப்பே! - 42

பிறவிக் கடலுக் கோர்ஓடம்
பிடிக்கும் கலிநோய்க்கு அருமருந்து
துறவிக் குயர்வு ஈட்டதரகத்தில்
சுழலும் இருளுக் கொருதீபம்
உறவிக் குயிராய் உடல்தோறும்
ஒன்றாய் பலவாய் நிறைந்திருக்கும்
இறைவர்க் கிடத்தில் அமர்ந்திருக்கும்
**எழில்கோ மதியாள்** அஞ்செழுத்தே! - 43

40. கொண்மூ - கருமேகம், படி - பூமி. 42. நசை - விருப்பம்.

எழுத்தஞ் சினையும் மனத்துன்னி
இறைஞ்சி யொருகால் துதிப்பவர்க்கு
வழுத்தும் பரம பதம்எனநான்
மறையும் உறைக்கும் எனில்**வேதம்**
**பழுத்த குணக்கோ மதியே**நின்
பதம்பல காலும் துதிப்பவர்க்கு
விழுத்த வீடென்று உரைத்திடவும்
வேண்டும் கொல்லோ விளம்புவையே! - 44

வையம் உடுக்கும் கருங்கடலும்
மலர்க்கா யாவும் மரகதமும்
பெய்ய வடுக்கும் மழைமுகிலும்
பிறங்கற் கிறைவன் உவந்தளித்த
மையை முடுக்கும் **கருங்குழல்கோ**
**மதி**நின் வடிவை அடைவதற்குப்
பொய்யை ஒடுக்கித் தவம்புரிந்த
புதுமை யானும் அறிந்திலனே! - 45

அறியா கசடன் தருமமிலாத
அகந்தை பிடித்த குணக்கேடன்
வெறிதான் பிடித்துக் குடிகெடுத்து
வீணாய் அலைந்த கொடும்பாவி
முறைதான் தவறி மடந்தையரை
முயங்கித் திரிந்த விடன்எனிலும்
குறியாம் உனைக்கண்டு அடைந்தபினும்
**குற்றம் உளதோ கோமதியே!** - 46

மதியாது உலகில் கடும்பிணிதான்
வந்து துயரம் புரிந்திடவே
துதிசேர் உனையான் சரணடைந்து
தொழும்பன் ஆகிப் பணிவதெலாம்
நதியார் சடிலத் இறைபதும
நயன நளினத் தவர்இவர்க்குப்
பதிதான் இதுயீது என்றமைத்த
பவள யிதழ்க்**கோ மதிஅம்மையே!** - 47

45. பிறங்கல் - ஒளிர்தல், புதுமை - அதிசியம்.





அமையா ஆசைப் பெருங்காற்றால்
அடிபட்டு உழன்று அறிவிழந்து
இமையா டாமல் அயிர்த்துமிக
இழிவாம் பாவப் பெருங்கடலுள்
சுமையாம் உடலின் உடன்உயிரும்
சோர்ந்து கிடக்கும் எளியேனை
**உமைகோ மதி**யென்று உரைத்திடநீ
உவந்து கரைசேர்த்து அருளுவையே! - 48

வையம் புரக்கும் இறை பதமும்
வானம் புரக்கும் உயர்பதமும்
சையம் புரக்கும் இறைவனருள்
தாய்நீ எனக்குக் கொடுத்திடினும்
ஐயம் பிறக்கும் நிலையாதென்று
அதனால் உனது திருவடியே
உய்யும் படிக்கிங்கு **எளியேனுக்கு**
**உதவ வேண்டும் கோமதியே!** - 49

மதியா துளத்தில் இருந்துதிரி
மலமாம் இருளைக் கெடுத்துநல்
விதிபோல் உவந்து திருவருள்நீ
விளங்கக் கொடுத்துஇங் கெனையாளத்
ததிகாண் விரைந்து மனங்களித்துத்
தமியேன் காணத் தணந்திருந்த
நிதிதா னேவந் தெழுந்தென
நேர்**வந் தருள்கோ மதியுமையே!** - 50

**வேறு - கலித்துறையந்தாதி**

மையறு வேதங்கள் கூடிமுன் னாயிர
வற்சரமும்
மெய்யுறத் தேடியும் காணாத **கோமதி**
**வித்தகியைக்**
கையுறு நெல்லிக் கனிபோல் திருவுருக்
கண்டுதொழற்
எய்திடச் செய்த தவம்யா துரைத்தருள்
என்னுளமே! - 51

51. வற்சரம் - வருஷம், மையறு - பசுமை.

## வேறு - அறுசீர் அந்தாதி

உள்ளத் துலவும் அறிவேயான்
உனைத்தாள் அடைந்தேன் எனைநீயும்
எள்ளத் தனையும் அகலாமல்
இருந்தாய் எனினும் உலகறிய
மெள்ளக் கருணை புரிவாயேல்
விழுப்பம் உடைத்தாம் உனக்கினியான்
விள்ளப் படுமோ உனதுமனம்
விளங்கு புகழ்க்**கோ மதிஉமையே!** - 52

மைந்தர் வருந்தி அழுங்குரல்தன்
மாதா செவியில் புகவோடி
வந்து மடியில் எடுத்திருத்தி
வதனம் தனைப்பார்த்த அமிழ்தருத்திச்
சிந்தை விசனம் தவிர்ப்பாள்அச்
செயல்போல் துயரம் அறஅருளைத்
தந்து சுதனாய் எனைநீயும்
**தற்காத்து அருள்வாய் கோமதியே!** - 53

திசைநான் முகனைச் சிறையிலிடும்
சிறுவன் குமரன் திருத்தோழி
வசைதீர அமரர் அடியவர்கள்
மகத்தாம் பரமன் தனிக்கொழுநன்
இசையார் கருணைத் திருநெடுமால்
இனிதாம் துணைவன் **கோமதிநின்**
**அசையாப் புகழை** அறிந்துரைத்தற்கு
ஆரோ தரமிங்கு அறியேனே! - 54

ஏனிப் படியீர் உமக்குநலம்
இனிதாய் கிடைக்கில் அதுஎமதால்
தானிப் படியில் உதித்ததெனத்
தணந்தால் விதியால் ஒன்றுரைப்பீர்
வானிப் படியினும் இறைஞ்ச
**வரும்கோ மதி**யென் றுரைசாரும்
ஞானப் படிவத் திரிபுரையால்
அங்கும் இவைஎன் றறியீரே! - 55

---

52. அறிவு - இறைஞானம். 54. வசை - குற்றம்.





ஈர அமுதம் மதிவதனத்து
எந்தாய் இருக்கும் மறையுரைக்கும்
வீர அமல உமைகௌரி
விண்ணோர் வணக்கும் எழில்நீலி
நாரி சிவை**கோ மதி**பரையின்
நயன வருளீங் கடைந்தவர்க்குத்
தூர விருக்கும் பதமணித்தாம்
சுகத்தை யலது துயரிலையே! - 56

இலையார் புனலில் அறிதுயிலும்
இறைவர்க் கிளையோய் எவர்களுக்கும்
தலையாய் உறும்**கோ மதியே**செய்
தவமும் செபமும் தனிநோன்பும்
கலையார் கேள்வி யுடன்ஒழுக்கும்
கருதும் எவையும் அடியேற்கு
நிலையாம் உனது கழல்இணையை
நிதமும் மறவாச் சிந்தனையே! - 57

சிந்தை தனில்உன் திருவடியைத்
திறமாய் இருத்தி யான்கொடுத்த
வந்தித் திடலாம் பொருட்குவரும்
வட்டிக் கீடென்று அகமகிழ்ந்து
தந்த சுகவாழ் வினைப்பெறுவேன்
தாயே முதலுக் கீடாய்நின்
கந்த மலர்ச்சே வடியலது
கருதேன் எவையும் **கோமதியே!** - 58

கோள்என் புரியும் வலிமிகுந்த
குறள்என் புரியும் கொடிதான
நாள்என் புரியும் பலவிதமாய்
நலிவென் புரியும் நகைத்திலங்கு
வாள்என் றயிர்க்கும் மதர்நெடுங்கண்
மலைமா தாகும் **கோமதியின்**
தாள்ஒன் றடியார் தமக்கடியன் - 59
ஆகி யிருக்கும் தமியனையே!

அனைநீ வளர்க்கும் அப்பனும்நீ
　　அறிவு பெருகக் கசடறுத்தே
எனைநூல் பயிற்றும் குரவனும்நீ
　　இறையும் தனிநீ எனில்அரிய
உனையான் மறக்கில் குறையெனக்கிங்
　　குளதோ **எழில்கோ மதியே**யென்
மனது களிக்கத் திருவருள்நீ
　　வழங்கா திருக்கில் அதுஉனக்கே! - 60

### வேறு - கலித்துறையந்தாதி

உனக்கெனைப் போல்அடி யார்ஒரு கோடியுண்
　　டுன்பதம்தாள்
எனக்குனைப் போல்பரம் யானறி யேன்இந்த
　　ஏழையைநீ
மனக்கறுப் பின்றி யருள்வாய் பிழைத்திட
　　மாசறுசீர்
தனக்கிணை தான்எனும் **கோமதியாகிய
　　சற்குணியே!** - 61

### வேறு - அறுசீர் அந்தாதி

குணமே பதியாய்க் குடியிருந்த
　　குறையா நிறைவே அளிமுரல
மணமே கமழும் **மலர்க்குழல்கோ
　　மதியே** இமய மலைத்திருவே
நிணமே ஒழுகக் கிருமிகளால்
　　நெருங்கும் மலக்கூட் டினைஇனியோர்
கணமே எனினும் பொறுத்தெளியேன்
　　காத்தற் கெளிதால் அருளுவையே! - 62

வைதிங்கு உனையார் அடித்தாலும்
　　மனமே மௌன முடன்இருந்தே
எய்தி எளியார் தனைவலியார்
　　எதிர்த்துங் கடித்தால் வலியாரைத்
தெய்வம் அடிக்கும் எனும்வார்த்தை
　　தெளிவாய் அறிவாய் ஆதலினால்
சைவ நெறியாம் கோமதிதாள்
　　சார்ந்து அர்ப்பணமே புரிகுவையே! - 63





வையத் தரசன் இறந்திடினும்
　　மகத்தாம் உடலைக் கொடுதகனம்
செய்யத் துணிவார் அ:.திலரேல்
　　சேமித் திடுவர் இதையறிந்தும்
மெய்யைச் சதமாய் இனும்வளர்த்து
　　வீணாய் அலையாது உயிர்க்குறுதி
எய்தப் பரை**கோ மதிகழலை**
　　இறைஞ்சாய் எனது மடமனமே! - 64

மனவாக்கு உடல்என் றிடும்மூன்றால்
　　மறவாத ஆசை யினைமறுத்து
இனமாய் உளநின் அருள்நினைந்து
　　இனிதாம் புகழை எடுத்துரைத்தும்
உனதா லயத்தை வலம்புரிந்தும்
　　உறுதி யடையும் அடியாரில்
புனித முறஎன் தனக்கருள்**கோ
　　மதியே** இமையத் திரிபுரையே! - 65

புரையும் அளவும் அடிகடையும்
　　புரையும் குறைவும் அலதிகந்து
தரையும் புனலும் அனல்அனிலம்
　　தனிவான் இவையும் தானாகி
விரியும் வெளியாய் அருவருவாய்
　　விளங்கும் ஒளியாய் இருப்பயேல்
உரைசெய் தடியில் பணிபவர்யார்
　　உரைப்பாய் **எழில்கோ மதியுமையே!** - 66

உமையான் வினவற் கொன்றுளதீங்(கு)
　　உலகீர் நீத்தம் எழுந்துவரும்
சமையம் அதிலோர் அணைகோலத்
　　தடுக்க நினைப்பீர் நினைந்திடில்என்
நமையும் இயமன் வரும் போதில்
　　அறிவோம் எனநீர் நினையாமல்
**உமைகோ மதி**தாள் துணையெனவே
　　உறுமின் விரைவில் மனம்கனிந்தே! - 67

புரையில் உலகம் அனைத்தினுக்கும்
பொதுவாய் அனைபோல் அமுதளித்து
விரைவில் **அருள்கோ மதி**யுனையும்
மிளிரும் சுதையாய்ப் பெறநினைந்து
தரையில் இமவான் முதல்சிலர்எத்
தவங்கள் புரிந்தார் அதைவிரித்து
வுரையுன் தனக்கு மகவாக
உயர்ந்த தவம்செய் திடஎனக்கே! - 76

எனது பொருள்என்று இழந்ததன்பின்
ஏமாந் திருக்கும் மடமனமே
உனது பொருள்என்று உரைத்ததுஈங்
உனைக்காத் தருள்செய் திருந்திடுமோ
உனது பொருளாய்த் தேடுவதொன்று
உண்டாங் கது**கோ மதியிருதாள்**
மனதில் கவலை ஒழித்தெவையும்
வழங்கும் அதைநீ தேடுவையே! - 77

தேடற் கரிய பரம்பொருளே
சித்தே யுலகம் தனைப்பரிக்கும்
சேடற் குரைத்தற் கரிதாம்உன்
திருச்சீர் நினைந்து வழுவாமல்
பாடற் கடியேன் சிறுநா முன்
பணிந்து தவம்செய் திருந்ததுகொல்
நீடற் புதமாய் உலகனைத்தும்
நிறைந்த புகழ்**க்கோ மதியுமையே!** - 78

மைவாழ் நெடுங்கண் சுரமாதர்
வந்தேத் தெடுப்ப மறைமுனிவோர்
மெய்வாழ்ந் திட்டுன் அமுதருந்தும்
விபுத ருடன்வந் தடியிறைஞ்சிக்
கைவாழ் யாழின் இசைவழிதேன்
காதல் முனிநா ரதன்விடுப்ப
செய்வா ழனமேல் **கோமதி**நாம்
சிறக்க வருநாள் எதுமனமே! - 79

76. சுதை - மகளாக.





மனப்பூ ரணமாய்ச் சரணமென
வந்தோர் அடியில் பணிந்திருந்த
எனைக்கா வாமல் இருந்திடில்உன்
இனிதாம் கருணை எதுவாகும்
பினைப்போய் உனது அடியேன்யான்
பிழைத்தற் கெ:.து வழியுரைப்பாய்
நினைப்போர் உளத்தா மரைத்தவிசில்
இறை**கோ மதியே திரிபரையே!** - 80

**வேறு - கலித்துறையந்தாதி**

புரந்தரன் ஆதிய வானவர் வாழ்க்கையும்
பூமியெலாம்
புரந்திடும் வாழ்க்கையும் மாதவர் யோகமும்
போதயனார்
இரந்தருள் தாவெனப் போற்றியெப் போதும்
இறைஞ்சவெகு
வரம்தரு **கோமதி நாயகி** தாள்தொழ
வந்ததுவே! - 81

**வேறு - அறுசீர் அந்தாதி**

அதுவோ இதுவோ பரப்பிரம்மம்
ஆவது எனச்சாத் திரமனைத்தும்
பொதுவாய் நீர்பார்த் தாய்ந்திடினும்
புவியீர் அளிகள் முரன்றுழக்க
மதுவார் கமல மலர்க்கழல்**கோ**
**மதியை** யலதிங்கு இலையதனால்
சிதைசேர் அரிட்டம் எனத்தேம்பித்
தியங்கா துமையைப் பணியுமினே! - 82

மின்னிற் சிறந்த இடையார்தம்
விழைவின் பொருட்டால் ஆங்கவர்கடமைப்
பொன்னிற் சிறந்த திருவெனவும்
புகழிற் சிறந்த புகழ்எனவும்
பன்னித் தவமாம் **கோமதியின்**
**பதங்கள்** மறந்தாய் இயமன்வரும்
அன்ன பொழுதின் எவர்கள்துணை
அறிந்தால் உரையென் மடநெஞ்சே! - 83

நெஞ்சே நீவந் தொருவழியில்
நில்லாது உழன்று பலதுறையில்
பஞ்சாய்ப் பறந்து திரிந்திடினும்
பயன்கண் டடையாய் அடையவெனில்
எஞ்சாது அலரின் நறுமணம்போல்
எல்லா வுயிர்க்கும் உயிராய்வந்து
அஞ்சா தேஎன்று அருள்புரியும்
அருள்**கோ மதியை** யடைவாயே! - 84

வாயும் விழியும் நெடுங்கரமும்
மனமும் மனிதர்க்கு இருந்துமிகத்
தேயும் இடையும் குறுநகையும்
திருக்கண் மலரும் திகழ்முகமும்
ஆயிங் கடியார்க் கருள்செயவந்
தருள்**கோ மதியைத்** தினம்துதித்து
நேய முடன்கண்டு அடிபணிந்து
நினையா திருக்கில் பயனிலையே! - 85

இலம்பா டகலப் பொருள்தாவென்று
இறைஞ்சிக் கவிகள் பலவியற்றிப்
புலம்பும் புலவீர் இதைசிறிதிப்
புவியில் மானுடர் அகற்றுவர்கொல்
இலம்பே ரருள்பொன் மனைவிசுதர்
ஈண்டும் கதியாண் டும்பெறற்குச்
சிலம்பார்த் திடும்**கோ மதி**கழற்குச்
சிறந்த கவிகள் இயற்றுமினே! - 86

மின்போல் தோன்றி அழிவாழ்வை
மேலாய் நினைந்து மனமகிழ்ந்து
அன்பாய் துதித்துன் அடிவணங்கி
அருள்சீர் அடையா அகந்தையினால்
தென்பாய் சிலர்கள் நெடுநாளும்
திரிவது எதனை நினைந்தேயோ
இன்பாய் எனதுயிர் இருதயமீது
இருந்த புகழ்க்**கோ மதி**யுமையே! - 87





மையற்று இலங்கு குலமணியே
மறையே மறையும் அறிவரிய
மெய்யிற் சிறந்த பரம்பொருளே
மிளிர்**கோ மதியே** திரிபுரையே
பையுள் அகன்றுன் அடிவணங்கும்
படிநீ எனது கருத்தின்மிசை
பொய்யற் றமர்ந்தாய் கைமாறென்
புரிவேன் இதற்கிங் கெளியேனே! - 88

எளியார் எனினும் குலத்தின்மிக
இழிந்தோர் எனினும் இசைபயிலும்
அளியார் கமலத் திருத்தாளை
அருசித்து உமை**கோ மதியை**நிதம்
தெளிவாய் துதிக்கில் அவரேஎன்
சிறந்த கடவுள் துதியாமல்
ஒளியார் வேதம் அறிந்துமிக
உயர்ந்தோர் எனினும் இழிந்தவரே! - 89

தவத்தால் உலகில் மனிதரெனத்
தான்வந் துதிப்பார் உதித்திடினும்
பவத்தால் வருமோர் அறுபகையும்
பாற அழித்தல் அரிதுஅதிலும்
சிவத்தால் **உயர்கோ மதி**யுமையைத்
தேவென் றுணர்தல் அரிதுஅறிந்து
நவத்தால் அவள்தாள் தொழுதல்மிக
நலமென்று உளமே வணங்குவையே! - 90

**வேறு - கலித்துறையந்தாதி**

வைகுந்த நாயகன் வாழ்த்திடத் தேவர்
மகிழ்ந்துதொழ
வைகுந்தம் நாயகர்க் கோர்புறம் மேவி
வதிந்தநெடும்
வைகுந்தம் போல்**விழிக் கோமதி** தாள்மன
மேதுதிசெய்
வைகுந்த மேமுதல் எல்லா வியாதியும் - 91
மாறுதற்கே!

---

91. வைகுந்த நாயகன் - விஷ்ணு, வைகுந்த நாயகர் - வைகும் + தம் + சிவன் (தம் நாதனாக உள்ள சிவன்), வைகுந்தம்போல் விழி - கூர்மையான வேல் போன்ற கண், வைகுந்தம் - கண்ணோய்.

**வேறு - அறுசீர் அந்தாதி**

தற்சேர்ந் திடுவெங் கருங்கொடியைத்
தனைப்போல் இமைய வசுவாக்கி
னிற்சேர்ந் தவரைத் துகள்துடைத்து
நீயாண் டருளல் அதிவியப்போ
அற்சேர்ந் திலங்கும் கருங்குழலாய்
அருள்சேர்ந் திலங்கும் மதிமுகத்தில்
விற்சேர்ந் தென்னப் பிருகுடியாய்
மிளிர்**கோ மதியே அம்பிகையே!** - 92

கையில் இனிதாய் மணமுளதாய்க்
கவின்பெற் றிருக்க நவநீதம்
நெய்யெங் குளதென்று அலைபவரை
நேராய் உளத்தில் இருந்தருளைச்
செய்யும் உனையான் அறியாமல்
திகைத்துப் பலவாய்த் திரிந்தலுத்தேன்
பைய வெடுத்துன் அருகிருத்திப்
பாலித் தருள்**கோ மதியுமையே!** - 93

மைந்தால் உயர்ந்து நிதிமிகுந்தால்
வளர்**கோ மதியை** மறந்திடுவார்
அந்தோ அவள்அங் கசையாமல்
அணுவும் அசையாது எனஅறியார்
சிந்தா குலம் வந்திடின்பணிவார்
செகத்தில் எவரும் திருகாமல்
செந்தா மரைத்தாள் இணைபணிவாய்
தினமும் அருள்சார்ந் திடமனமே! - 94

சார்ந்து துயிர்செய் கடும்பிணிகள்
தவிர்ந்து விரைவில் இருக்கவிடம்
ஓர்ந்து செலும்**கோ மதிஇருதாள்**
வந்திங்கு அடைந்தேன் **ஓர்நொடியில்**
**வார்ந்த கருணைத் திருநீறே**
வருமுந் தமையே கொலைபுரிதல்
ஆர்ந்த எனது மொழிப்படிநீ
அகன்றால் உமக்குக் குறையிலையே! - 95

92. அல்-இருள்,கருமை. பிருகுடி-புருவம். 93. நவநீதம்-வெண்ணை, நேராய்-போல





இல்லாப் பொருளில் கெ.்.துனக்கின்றி
இயம்பாய் மனமே அளிமுரலும்
அல்லார் குழல்**கோ மதி**கழலை
அடைந்த பொழுதே அகிலமுள
எல்லாப் பொருளும் உனக்கேயாம்
இமையோர் வணங்க ஒருகுறைவும்
இல்லாப் பதமும் கீழுறமேல்
எழுந்த பதமும் உனக்கறியே! - 96

அறிவாய் உடலின் உடனுயிரும்
அறிவும் எனஉள் ளுடன்புறத்து
நிறைவாய் இருக்கும் பரம்பொருளின்
நீலமீ தமர ருடன்விரிந்து
மறைவாய் முனிவர் களும்இறைஞ்சும்
மலர்நேர் **அடிக்கோ மதி**யெனவங்
கெறிவாய் உளமே சிலர்பரமென்று
இசைத்தது இசைக்கிற் குறையுனக்கே! - 97

உனக்குத் தமியேன் அடியிணைதாழ்ந்
தொழுகும் அடியார் களில்ஒருவன்
தனக்குச் சிறிது நிகராகத்
தவம்செய் திருக்கில் தணவாமல்
நினைக்கும் படியென் மனம்மீதி
நிலைகொண் டிருப்பாய் இருந்திடினோர்
சினக்கும் இயமன் வரின்கலங்கேன்
சிவையே **எழில்கோ மதியுமையே!**
- 98

அறியாய் போலும் யான்படும்பாடு
அம்மா அறிந்தும் அருளிலர்போல்
நெறிநீ தவறி யெனைமறந்தாய்
நினையான் பிடித்தன் பெனும்கயிற்றால்
முறையே பிணித்தென் இருதயமாம்
மூரிச் சிறையில் அடைத்திடுவன்
குறைநீ சொலினும் உனைவிடுக்கேன்
குறிப்பாய் அறிநீ **கோமதியே!** - 99

**வேறு - அறுசீர் அந்தாதி**

தற்சேர்ந் திடுவெங் கருங்கொடியைத்
தனைப்போல் இமைய வசுவாக்கி
னிற்சேர்ந் தவரைத் துகள்துடைத்து
நீயாண் டருளல் அதிவியப்போ
அற்சேர்ந் திலங்கும் கருங்குழலாய்
அருள்சேர்ந் திலங்கும் மதிமுகத்தில்
விற்சேர்ந் தென்னப் பிருகுடியாய்
மிளிர்**கோ மதியே அம்பிகையே!** - 92

கையில் இனிதாய் மணமுளதாய்க்
கவின்பெற் றிருக்க நவநீதம்
நெய்யெங் குளதென்று அலைபவரை
நேராய் உளத்தில் இருந்தருளைச்
செய்யும் உனையான் அறியாமல்
திகைத்துப் பலவாய்த் திரிந்தலுத்தேன்
பைய வெடுத்துன் அருகிருத்திப்
பாலித் தருள்**கோ மதியுமையே!** - 93

மைந்தால் உயர்ந்து நிதிமிகுந்தால்
வளர்**கோ மதியை** மறந்திடுவார்
அந்தோ அவள்அங் கசையாமல்
அணுவும் அசையாது எனஅறியார்
சிந்தா குலம் வந்திடின்பணிவார்
செகத்தில் எவரும் திருகாமல்
செந்தா மரைத்தாள் இணைபணிவாய்
தினமும் அருள்சார்ந் திடமனமே! - 94

சார்ந்து துயிர்செய் கடும்பிணிகள்
தவிர்ந்து விரைவில் இருக்கவிடம்
ஓர்ந்து செலும்**கோ மதிஇருதாள்**
வந்திங்கு அடைந்தேன் **ஓர்நொடியில்**
**வார்ந்த கருணைத் திருநீறே**
வருமுந் தமையே கொலைபுரிதல்
ஆர்ந்த எனது மொழிப்படிநீர்
அகன்றால் உமக்குக் குறையிலையே! - 95

92. அல்-இருள்,கருமை. பிருகுடி-புருவம். 93. நவநீதம்-வெண்ணை, நேராய்-போல





இல்லாப் பொருளில் கெ.ஃ.துனக்கின்றி
இயம்பாய் மனமே அளிமுரலும்
அல்லார் குழல்**கோ மதி**கழலை
அடைந்த பொழுதே அகிலமுள
எல்லாப் பொருளும் உனக்கேயாம்
இமையோர் வணங்க ஒருகுறைவும்
இல்லாப் பதமும் கீழுறமேல்
எழுந்த பதமும் உனக்கறியே! - 96

அறிவாய் உடலின் உடனுயிரும்
அறிவும் எனஉள் ளுடன்புறத்து
நிறைவாய் இருக்கும் பரம்பொருளின்
நீலமீ தமர ருடன்விரிந்து
மறைவாய் முனிவர் களும்இறைஞ்சும்
மலர்நேர் **அடிக்கோ மதி**யெனவங்
கெறிவாய் உளமே சிலர்பரமென்று
இசைத்தது இசைக்கிற் குறையுனக்கே! - 97

உனக்குத் தமியேன் அடியிணைதாழ்ந்
தொழுகும் அடியார் களில்ஒருவன்
தனக்குச் சிறிது நிகராகத்
தவம்செய் திருக்கில் தணவாமல்
நினைக்கும் படியென் மனம்மீதி
நிலைகொண் டிருப்பாய் இருந்திடினோர்
சினக்கும் இயமன் வரின்கலங்கேன்
சிவையே **எழில்கோ மதியுமையே!**
- 98

அறியாய் போலும் யான்படும்பாடு
அம்மா அறிந்தும் அருளிலர்போல்
நெறிநீ தவறி யெனைமறந்தாய்
நினையான் பிடித்தன் பெனும்கயிற்றால்
முறையே பிணித்தென் இருதயமாம்
மூரிச் சிறையில் அடைத்திடுவன்
குறைநீ சொலினும் உனைவிடுக்கேன் - 9
குறிப்பாய் அறிநீ **கோமதியே!**

மதிதான் மறந்தோ பயின்றவர்கள்
வார்த்தைக் கிசைந்தோ வரம்பிகந்த
நிதிசேர் இமயத் தினிற்பிறந்த
நீயோர் கணமும் வதிவதற்குப்
பதியோ கிடையாது உணவுபலி,
படுக்கை சுடலை, எலும்புபணி
விதியோ சிவனை மணந்தசெயல்
விளம்பாய் **எழில்கோ மதியுமையே!** - 100

**மதுசூ தனனுக் கிளையாய்ஓர்**
**வரம்வேண் டுவன்நீ மறுக்காமல்**
**இதமாய்த் தருவாய் அதுஎதுஎனில்(அ.ஃ.தெதெனில்)**
**இன்று முதலாய் உனதுகளப்**
**பததா மரையைப் பணிந்தடியேன்**
**பகர்ந்த பனுவல் இதைப்படிப்போர்**
**சதமாய் சுகமும் பெருவாழ்வும்**
**சார்ந்து துயரைத் தவிர்ப்பதற்கே!** - 101

**கோமதியம்மன் திருவடிகளே சரணம்**

கோமதியம்பாள் கலித்துறையந்தாதி
முற்றுப்பெற்றது



**வாழ்த்து**

ஆறிரு தடந்தோள் வாழ்க அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்க சீரடியார் எல்லாம்.

வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க குறைவிலாது உயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மை கொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்.

- கந்தபுராணம்

**திருச்சிற்றம்பலம்**